# பதிப்புரை

ஆனைமுகக் கடவுளுடைய
டிவம் ஓங்காரமாகும். தமிழில்
ழுதப்பெறும் ஓ என்னும் எழுத்து,
ானைமுகத்துடன் ஒற்றுமை
டையதாக விளங்குதலைக் காண
ம். ஆனைமுகக் கடவுளாகிய
ாயகப் பெருமான் சிவபெருமா
ுக்கு முதற் பிள்ளையாகையால்
'மூத்தபிள்ளையார்' என்று கூறப்
பெறுவார். முதற்கடவுளாகிய இவர்
எல்லோருக்கும். நல்ல தலைவராகை
யால் 'விநாயகர்' எனவும், ஆனை
முகத்துடன் விளங்குகிற படியால்
'ஆனைமுகக் கடவுள்' எனவும், சிவ
ணங்கட்குத் தலைவராக விளங்கு
படியால் 'கணபதி' யெனவும்

ச விநாயகர் புகழ்நூற்றுக்கோ..

'கணேசர்' எனவும் மற்றும் பல வகையாகவும் காரணம் பற்றிப் பெயர் பெறுவார். இவர் தம்மை வணங்கி வழிபடுபவர்களுடைய காரியங்களை இனிது முடித்தருளுவார்.

ஆனைமுகக் கடவுள் வழிபாடு செய்பவர்கட்குப் பயன்படுமாறு ஆனைமுகக்கடவுளின் அருளை பெற்ற ஒளவையாரும் வேறு பல மெய்யடியார்களும் ஆனைமுகப் பெருமான்மீது பாடிய செய்யுட்களில் சிறந்தவைகளை 'முருகன் புகழ் நூற் கோவை'யைப்போல் சிறிய அளவில் மிக்க வனப்புடன் 'விநாயகர் புகழ்நூற் கோவை' என்னும் பெயரோடு இப்பொழுது

விநாயகர் புகழ்நூற்கோவை ௫

வெளியிடுகிறோம். இந்நூலைப் பெற்று ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டு அவர்தம் திருவருளுக்கு உரியவர்களாவீர்களாக!

சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகத்தார்




கரு.

# உள்ளுறை

பக்கம்

பக்கம்

# க. பிள்ளையார் வணக்கம்

[திருஞானசம்பந்தர் அருளியது]

திருச்சிற்றம்பலம்

பிடியத னுருவுமை
கொளமிகு கரியது
வடிகொடு தனதடி
வழிபடு மவரிடர்
கடிகண பதிவர
வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி
வலமுறை யிறையே.

திருச்சிற்றம்பலம்

# ௨. வேழமுகம்

திருச்சிற்றம்பலம்

வேழ முகத்து
விநாயகனைத்தொழ
வாழ்வு மிகுத்து வரும்.
வெள்ளிக் கொம்பன்
விநாயகனைத்தொழுந்
துள்ளி யோடுந்
தொடர்ந்த வினைகளே.
அப்பமுப் பழம்
அமுதுசெய் தருளிய
தொப்பை யப்பனைத்
தொழுவினை யறுமே.

---

## ௫. பல்பெயர்க் கோவை

சிந்தித் தவர்க்கருள்
கணபதி போற்றி
சிறிய ஆனைக்
கன்றே போற்றி
அன்புடை அமரரைக்
காப்பாய் போற்றி
ஆவித் துணையே
கணபதி போற்றி
இண்டைச் சடைமுடி
இறைவா போற்றி
ஈசன் தந்தருள்
மகனே போற்றி
உன்னிய கருமம்
முடிப்பாய் போற்றி
ஊர்நவ சந்தி
உகந்தாய் போற்றி
எம்பெரு மானே
இறைவா போற்றி

ஏழுல குந்தொழ
நின்றாய் போற்றி
ஐயா கணபதி
நம்பியே போற்றி
ஒற்றை மருப்புடை
வித்தகா போற்றி
ஓங்கிய ஆனைக்
கன்றே போற்றி
ஔவிய மில்லா
அருளே போற்றி
அக்கர வந்து
ஆனவா போற்றி
கணபதி என்வினை
களைவாய் போற்றி
ஙப்போல் மழுவொன்
றேந்தியே போற்றி
சங்கரன் மகனே
சதுரா போற்றி
ஞய நம் பினர்பா
லாடியே போற்றி

இடம்படு விக்கின
விநாயகா போற்றி
இணங்கிய பிள்ளைகள்
தலைவா போற்றி
தத்துவ மறைநெறி
வித்தகா போற்றி
நன்னெறி விக்கின
விநாயகா போற்றி
பள்ளியி லுறைதரும்
பிள்ளாய் போற்றி
மன்று ளாடும்
மணியே போற்றி
இயங்கிய ஞானக்
குன்றே போற்றி
அரவக் கிண்கிணி
ஆர்ப்பாய் போற்றி
இலகக் கொம்பொன்
றேந்தியே போற்றி
வஞ்சனை பலவுந்
தீர்ப்பாய் போற்றி

அழகிய ஆனைக்
கன்றே போற்றி
இளமத யானை
முகத்தாய் போற்றி
இறகுபதி விக்கின
விநாயகா போற்றி
அனந்தலோ டாதியின்
அடிதொழ வருளே.

திருச்சிற்றம்பலம்

---

குறிப்பு ;

இக் கோவையில் மூன்றாவது வரியிலிருந்து அகர முதல் னகர இறுவாயாகத் தமிழ் எழுத்து வரிசை அமைந்திருப்பதைக் காண்க.

---

# ச. பிள்ளையார் சிந்தனை

திருச்சிற்றம்பலம்

எள்ளு பொரித்த பொரியை
இடித்தவல் தன்னிற் கலந்து
வள்ளிக் கிழங்கைத் திருத்தி
வாழைப் பழத்தை யுரித்து
உள்ளிய பாகுந் திரட்டி
உண்ணும் படியே தருவோம்
கள்ளத் திருமால் மருகா
கணபதி சப்பாணி கொட்டாயே
ஆறு தேங்கா யவல்தூணி
அதற்குத்
தகுந்த எள்ளுருண்டை
நூறு குடலை மாம்பழம்
நொடிக்கு மளவி லமுது
செய்ய வல்ல பிள்ளாய்

ஆடல் பாடல் சங்கீதம்
அடியேன் காணநின் ருடாயே
சண்டப் பெருச்சாளி மீதேறிச்
சடுகுடு என்ன உலாவி
இண்டை இளம்பிறை சாய
இணங்கிய கொம்போ ரிரண்டுத
அண்டத் தமரர் துதிக்க
அடைக்கலங் காத்த பிரானுரே
குண்டைக் கணபதி நம்பி
குடங்கையால் சப்பாணி கொட்
[டாயே
பொழுது விடிந்த பொழுது
போய்த் திருமலை ஏறவேண்டும்
ஏறி மலர்ந்தபூக் கொய்யவேண்
[டும்
கொய்து திருமுடி சாத்தவேண்டும்
சாத்திக் கைகட்டி நிற்கவேண்டும்
நின்று, திருவிளக்கு ஏற்றவேண்டும்

ஏற்றி அரகரா என்னவேண்டும்
ஐயா கணபதி நம்பி
ஆயிரம் நாமம் உடையாய்
பொய்யில்லா மெய் உரைப்பாய்
போனதெல்லாந் தருவாய்
வெள்ளித் தாலம் பூசிவைத்து
வேண்டும் படியே யிட்டுண்டு
பள்ளிக் கேசு நடத்தாய்
பாக்கியஞ் செய்த நாங்கள்
பிள்ளையார் என்னும் பேருடையீர்
பிரம மென்னும் பேருடையாய்
பிள்ளைகள் தங்கள் பிரானுக
இருந்தீரே பிரானுரே
எங்கள் மனது கலங்காதே
பள்ளித் தடுக்கும் கையேடும்
படிக்குஞ் சுவடியும் பரிந்தெடுத்துத்
துள்ளித் திரியுங் கால்கள்தமைச்
சுகமே நிறுத்தும் பிரானுரே

(நாங்கள்)

ஓடாதே ஒளியாதே
  இட்டதே சோறும்
பெற்றதே கறியும்
  உண்டு தூங்கிப்
பூசை முடித்து
  வெள்ளி முளைக்கப்
பள்ளிக்கு வரச்
  செய்விரே பிரானுரே.

திருச்சிற்றம்பலம்

———

## ௫. விநாயக கவசம்

[காசிப முனிவர் அருளியது]

வளர்சிகையைப் பராபரமாய்
வயங்குவிநா யகர்காக்க
வாய்ந்த சென்னி
அளவுபடா அதிகசவுந்
தரதேக மகோற்கடர்தாம்
அமர்ந்து காக்க
விளரறநெற் றியையென்றும்
விளங்குகா சிபர்காக்க
புருவந் தம்மைத்
தளர்வில்மகோ தரர்காக்க
தடவிழிகள் பாலசந்
திரனார் காக்க. ௬

கவின்வளரும் அதரம்கச
முகர்காக்க கால்அங்கனைக்
கிரீடர் காக்க
நவில்சிபுகம் கிரிசைசுதர்
காக்கநனி வாக்கைவிநா
யகர்தாம் காக்க
அவிர்நகைதுன் முகர்காக்க
அள்ளெழிற்செஞ் செவிபாச
பாணி காக்க
தவிர்தலுறு திளங்கொடிபோல்
வளர்மணிநா சியைச்சிந்தி
தார்த்தர் காக்க. உ

காமருபூ முகந்தன்னைக்
குணேசர்நனி காக்ககளம்
கணேசர் காக்க
வாமமுறும் இருதோளும்
வயங்குகந்த பூர்வசர்தாம்
மகிழ்ந்து காக்க

ஏமமுறு மணிமுலைவிக்
கினவிநா சன்காக்க
இதயந் தன்னைத்
தோமகலுங் கணநாதர்
காக்கஅகட் டினைத்துலங்கே
ரம்பர் காக்க. ௩

பக்கம்இரண் டையுந்தரா
தரர்காக்க பிருட்டத்தைப்
பாவம் நீக்கும்
விக்கினக ரன்காக்க
விளங்கிலிங்கம் வியாளபூ
டணர்தாம் காக்க
தக்குய்யந் தன்னைவக்
கிரதுண்டர் காக்கசக
னந்தை அல்லல்
உக்ககண பன்காக்க
ஊருவைமங் களமூர்த்தி
உவந்து காக்க. ௪

தாழ்முழந்தாள் மகாபுந்தி
காக்கஇரு பதம்ஏக
தந்தர் காக்க
வாழ்கரம்கிப் பிரப்பிரசா
தனர்காக்க முன்கையை
வணங்கு வார்நோய்
ஆழ்தரச்செய் ஆசாபூ
ரகர்காக்க விரல்பதும
அத்தர் காக்க
கேழ்கிளரும் நகங்கள்விநா
யகர்காக்க கிழக்கினிற்புத்
தீசர் காக்க.
அக்கினியிற் சித்தீசர்
காக்கஉமா புத்திரர்தென்
ஆசை காக்க
மிக்கநிரு தியிற்கணே
சுரர்காக்க விக்கினவர்த்
தனர்மேற் கென்னுந்

திக்கதனிற் காக்கவா
யுவிற்கசகன் னர்காக்க
திகழ்உ தீசி
தக்கநிதி பன்காக்க
வடகிழக்கில் ஈசநந்
தனரே காக்க. ௬

ஏகதந்தர் பகல்முழுதுங்
காக்கஇர வினும்சந்தி
இரண்டன் மாட்டும்
ஓகையின்விக் கினகிருது
காக்கஇராக் கதர்பூதம்
உறுவே தாளம்
மோகினிபேய் இவையாதி
உயிர்த்திறத்தால் வருந்துயரும்
முடிவி லாத
வேகமுறு பிணிபலவும்
விலக்குபுபா சாங்குசர்தாம்
விரைந்து காக்க. ௭

மதிஞானம் தவம்தானம்
மானம்ஒளி புகழ்குலம்வன்
சரீரம் முற்றும்
பதிவான தனம்தானி
யம்கிருகம் மனைவிமைந்தர்
பயில்நட் பாதிக்
கதியாவும் கலந்துசர்வா
யுதர்காக்க காமர்பவுத்
திரர்முன் னை
விதியாரும் சுற்றமெலாம்
மயூரேசர் எஞ்ஞான்றும்
விரும்பிக் காக்க.

வென்றிசீ விதம்கபிலர்
காக்ககரி யாதியெலாம்
விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனைமுக்
காலமும்ஓ திடின்நும்பால்
இடையூ றொன்றும்

ஒன்றுறு முனிவரர்காள்
அறிமின்கள் யாரொருவர்
ஓதி னும்
மன்றஆங் கவர்தேகம்
பிணியறவச் சிரதேக
மாகி மன்னும். ௯



விநாயககவசத்தை நாடோறும் முறையாக ஓதி வருவோர்க்குப் பிணி, வறுமை, மனக்கவலை முதலியன நீங்கும். நன் மக்கட் பேறு, நல்லோர் நட்பு, எண்ணியது எய்தல் முதலிய நன்மைகள் எல்லாம் உண்டாகும்.

---

## ௬. விநாயக ரகவல்

[ஔவையார் அருளியது]

சீதக் களபச்
செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு
பலஇசை பாடப்
பொன்அரை ஞாணும்
பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில்
வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும்
பெரும்பாரக் கோடும்
வேழ முகமும்
விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும்
அங்குச பாசமும்

நெஞ்சிற் குடிகொண்ட
நீல மேனியும்
நான்ற வாயும்
நாலிரு புயமும்
மூன்று கண்ணும்
மும்மதச் சுவடும்
இரண்டு செவியும்
இலங்குபொன் முடியும்
திரண்ட முப்புரி நூல்
திகழொளி மார்பும்
அற்புதம் நின்ற
கற்பகக் களிறே
முப்பழம் நுகரும்
மூஷிக வாகன
இப்பொழு தென்னை
யாட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத்
தானெழுந் தருளி

மாயாப் பிறவி
மயக்க மறுத்தே
திருந்திய முதல்ஐந்
தெழுத்துந் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென்
உளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக்
குவலயந் தன்னில்
திருவடி வைத்துந்
திறம்இது பொருள்என
வாடா வகைதான்
மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற்
கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம்
புகட்டியென் செவியிற்
தெவிட்டாத ஞானத்
தெளிவையுங் காட்டி

ஐம்புலன் தன்னை
அடக்கு முபாயம்
இன்புறு கருணையின்
இனிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங்
கருத்தினை யறிவித்
திருவினை தன்னை
அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந்
தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின்
மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில்
ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை
அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத்
தங்கிசை நிலையும்

பேரு நிறுத்திப்
பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையின்
எழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனைக்
கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின்
முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின்
நாவில் உணர்த்திக்
குண்டலி யதனிற்
கூடிய அசபை
விண்டெழு மந்திரம்
வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின்
மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங்
கருத்தறி வித்தே

அமுத நிலையும்
ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன்
குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தின்
ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின்
உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ்
சதுர்முகச் சூக்கமும்
எண்முக மாக
இனிதெனக் கருளிப்
புரியட்ட காயம்
புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும்
தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால
வாயில் காட்டி

இருத்தி முத்தி
இனிதெனக் கருளி
என்னை அறிவித்
தெனக்கருள் செய்து
முன்னை வினையின்
முதலைக் களைந்தே
வாக்கும் மனமும்
இல்லா மனோலயம்
தேக்கியே என்றன்
சிந்தை தெளிவித்
திருள்வெளி யிரண்டிற்
கொன்றிட மென்ன
அருள்தரும் ஆனந்தத்
தழுத்தியென் செவியில்
எல்லை இல்லா
ஆனந்த மளித்
தல்லல் களைந்தே
அருள்வழி காட்டிச்

சத்தத்தி னுள்ளே
சதாசிவம் காட்டிச்
சித்தத்தி னுள்ளே
சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவாய்
அப்பா லுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற
கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும்
விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர்
குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின்
அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தின்
நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத்
தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக
விரைகழல் சரணே.

———

# எ. விநாயகர் அட்டகம்

[கச்சியப்ப முனிவர் அருளியது]

பந்த மகற்றும் அனந்தகுணப்
பரப்பும் எவன்பால் உதிக்குமோ
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி யிருந்து கரக்குமோ
சந்த மறைஆ கமங்கலைகள்
அனைத்தும் எவன்பால் தகவருமோ
அந்த இறையாங் கணபதியை
அன்பு கூரத் தொழுகின்றும். க

உலக முழுதும் நீக்கமற
ஒன்ருய் நிற்கும் பொருள்எவன்
வுலகிற் பிறங்கும் விகாரங்கள் அவ்
உருத மேலாம் ஒளியாவன்
உலகம் புரியும் வினைப்பயனை
ஊட்டுங் களைகண் எவன்அந்த

உலக முதலைக் கணபதியை
உவந்து சரண மடைகின்றோம். ௨

இடர்கள் முழுதும் எவனருளால்
எரிவி ழும்பஞ் செனமாயும்
தொடரும் உயிர்கள் எவனருளால்
சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்
கடவுள் முதலோர்க் கூறின்றிக்
கருமம் எவனான் முடிவுறும்அந்
தடவு மருப்புக் கணபதிபொற்
சரணஞ் சரண மடைகின்றோம். ௩

மூர்த்தி யாகித் தலமாகி
முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்தறியாத்
திறத்தி னானும் உயிர்க்குநலம்
ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பானெவன்அப்

போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரண மடைகின்றும். ௪
செய்யும் வினையின் முதல்யாவன்
செய்யப் படுமப் பொருள்யாவன்
ஐய மின்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்யாவன்
உய்யும் வினையின் பயன்வினைவின்
ஊட்டி விடுப்பான் எவன் அந்தப்
பொய்யில் இறையைக் கணபதியை
புரிந்து சரண மடைகின்றும். ரு
வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன் விழுந்தகைய
வேத முடிவில் நடம்நவிலும்
விமலன் யாவன் விளங்குபர
நாத முடிவில் விற்றிருக்கும்
நாதன் எவன்எண் குணன்எவன்
போத முதலைக் கணபதியைப் [அப்
புகழ்ந்து சரண மடைகின்றும். ௬

மண்ணின் ஓர்ஐங் குணமாகி
வதிவான் எவன்நீ ரிடைநான்காய்
நண்ணி அமர்வான் எவன்தீயின்
மூன்றாய் நவில்வான் எவன்வளியின்
என்றும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்வா னிடைஒன்றும்
அண்ணல் எவன்அக் கணபதியை
அன்பிற் சரண மடைகின்றாம். எ

பாச அறிவிற் பசுஅறிவிற்
பற்றற் கரிய பரன்யாவன்
பாச அறிவும் பசுஅறிவும்
பயிலப் பணிக்கு மவன்யாவன்
பாச அறிவும் பசுஅறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேசன் எவன்அக் கணபதியைத்
திகழச் சரண மடைகின்றாம். அ

———

இவ்வெட்டுப் பாடல்களும் விநாயக புராணம் காசிபர் முதலி யோர் அனுட்டித்த படலத்திற் காணப்படுகின்றன. ''இவற்றை மூன்று நாட்கள் முப்பொழுதும் ஓதுபவர் எல்லா வகைப் பேறுகளை யும் பெறுவர்; எட்டு நாட்கள் ஓதுபவரும், சதுர்த்தியன்று எட்டு முறை ஓதுபவரும் அட்ட மாசித்தி களை யடைவர்; நாடோறும் பத்து முறையாக இரண்டு திங்கள் ஓது பவர் அரசர் வசியமடைவர்; அவ்வாறு இருபத்தொரு முறை ஓதுபவர் மக்கட்பேறு, கல்வி, செல்வம் முதலிய எல்லா நலங்களை யும் பெறுவர்'' என்று விநாயகப் பெருமான் காசிபர் முதலியோர்க்கு அருளினர்.

———

# அ. விநாயகர் வாழ்த்து

[கச்சியப்ப முனிவர்]

தேவர்தொழு தெழுங்கருணைச்
செல்வனே போற்றி
சிறந்தொளிரு மங்கலசொ
ரூபனே போற்றி
ஒவறுசித் திகளனைத்தும்
உதவுவோய் போற்றி
ஒலிகெழுமின் மணிபாத
சாலநூ புரங்கள்
மேவியொளிர் சரணனே
போற்றிமத நீரை
விரவியதின் கபோலனே
போற்றிநின தருளால்
பாவமொடு பலபிணியும்
பம்புவறு மைகளும்
பலவான இடர்களையும்
பாற்றுகஇன் புறவே.

விநாயக புராணம்

———

## ௯. முத்திவிநாயகரகவல்[1]

அரகர சிவசிவ போற்றி
ஆகுவா கனனே போற்றி
இபமுகத் தோனே போற்றி
ஈச்சுரன் மகனே போற்றி
உமையாள் சுதனே போற்றி
ஊனிற் பிரியாய் போற்றி
எமையாள் பவனே போற்றி
ஏழைபங் காளா போற்றி
ஐயா துய்யாய் போற்றி
ஒற்றை மருப்பாய் போற்றி
ஓதிய மறையே போற்றி
ஔவைக் கினியாய் போற்றி
அஃகாப் பொருளே போற்றி

---

1. அருணகிரிநாதர் அருளியதாக வழங்கப் பெறுகின்றது.

கணநாயகனே போற்றி
காரணப் பொருளே போற்றி
கிருபைக் கடலே போற்றி
கீதகின் கினியாய் போற்றி
குஞ்சரக் கன்றே போற்றி
கூறும் பரனே போற்றி
கெதியளிப் பவனே போற்றி
கேள்வி விசாலா போற்றி
கையைந் தவனே போற்றி
கொழுந்திடு முதலே போற்றி
கோவே தேவே போற்றி
கௌவைத் துணையே போற்றி
சதுர்மறைப் பொருளே போற்றி
சாய்மறைச் செவியாய் போற்றி
சிவன்கண் மணியே போற்றி
சீவசஞ் சிதமே போற்றி
சுருதி விளக்கே போற்றி
சூரசங் காரா போற்றி

ஜெய ஜெய விநாயகா போற்றி
சேய்நாற் கரசே போற்றி
சைவக் குருவே போற்றி
சொல்லும் பொருளே போற்றி
சோக விநாசா போற்றி
சௌரியக் களிறே போற்றி
தண்டைக் காலாய் போற்றி
தாமரைக் கரத்தாய் போற்றி
திருமால் மருகா போற்றி
தீங்குதீர்ப் பவனே போற்றி
தும்பிக் கையாய் போற்றி
தூலசூக் குமத்தோய் போற்றி
தெய்வ சிகாமணி போற்றி
தேவர்கள் தேவே போற்றி
தையல்வல் லபையாய் போற்றி
தொண்டர்க் கிதமே போற்றி
தோத்திரப் பிரியாய் போற்றி
தௌவைதீர்ப் பவனே போற்றி

நம்புந் துணையே போற்றி
நாகபூ டணனே போற்றி
நித்தன் மதலாய் போற்றி
நீறணி பவனே போற்றி
நுகருமா ரமுதே போற்றி
நூருப் பேறே போற்றி
நெற்றிக் கண்ணாய் போற்றி
நேயியந் திரத்தாய் போற்றி
நைவளந் துரந்தோய் போற்றி
நொந்தவர்க் காவாய் போற்றி
நோய்தீர்ப் பவனே போற்றி
நௌவி தரிந்தோய் போற்றி
பதினொரு மெய்யாய் போற்றி
பாப விநாசா போற்றி
பிணிக்கு மருந்தே போற்றி
பிடைதீர்ப் பவனே போற்றி
புத்திதந் தவனே போற்றி
பூமகள் மருகா போற்றி

பெற்றோர் மகிழ்வே போற்றி
பேழை வயிற்றாய் போற்றி
பையர வணிந்தாய் போற்றி
பொன்றாக் குன்றே போற்றி
போதப் பொருளே போற்றி
பௌவ வணாந்தோய் போற்றி
மதியளிப் பவனே போற்றி
மாதையில் வாழ்வே போற்றி
மிதியா னவனே போற்றி
மீதோர் வேந்தே போற்றி
முக்கண் ணுடையாய் போற்றி
மூவரின் முதலாய் போற்றி
மெய்ப்பொருட் கிரியே போற்றி
மேலாம் பதமே போற்றி
மைநிற மணியே போற்றி
மொழிவோர்க் கருளே போற்றி
மோதகக் கையாய் போற்றி
மௌலி தரித்தோய் போற்றி

வல்லபை மணாளா போற்றி
வாமன ரூபா போற்றி
விந்தைக் கிறைவா போற்றி
விரதன் டையனே போற்றி
உத்தம தேவே போற்றி
ஊனந் துரப்பாய் போற்றி
வெயிலவற் கினியாய் போற்றி
வேண்டி விநாயகா போற்றி
வையம் புரந்தோய் போற்றி
ஒப்பிலா மணியே போற்றி
ஓம்பொருளாளா போற்றி
ஔவுருற் பரனே போற்றி
மகாகண பதியே போற்றி

---

குறிப்பு : இவ் வகவல் அகர வரிசையில் அமைந்தது.

# ௧௦. விநாயகர் திருவகவல்[1]

சீர்தரு மூலச்
  செழுஞ்சுடர் விளக்கே
கார்நிற மேனிக்
  கற்பகக் களிறே
அல்லல் வினையை
  அறுத்திடு ஞான
வல்லபை தன்னை
  மருவிய மார்பா
பொங்கர வணிந்த
  புண்ணிய மூர்த்தி

---

1. 169 அடிகளைக் கொண்ட இவ் விநாயகர் திருவகவல் நக்கீர தேவர் அருளியதாக வழங்கப்பெறுகின்றது.

சங்கர னருளிய
 சற்குரு விநாயகா
ஏழை யடியேன்
 இருவிழி காண
வேழ முகமும்
 வெண்பிறைக் கோடும்
பெருகிய செவியும்
 பேழை வயிறும்
திருவளர் நுதலில்
 திருநீ றழகும்
சிறந்த கண்ணுஞ்
 சீதளப் பார்வையும்
நறுத்திகழ் நாசியும்
 நான்மலர்ப் பாதமும்
நவமணி மகுட
 நன்மலர் முடியும்
கவச குண்டல
 காந்தியும் விளங்கக்

சிந்தூரத் திலகச்
சந்தனப் பொட்டும்
ஐந்து கரத்தின்
அழகும்வீற் றிருக்க
பாச வினையைப்
பறித்திடும் அங்குச
பாசத் தொளியும்
பன்மணி மார்பும்
பொன்னு பரணமும்
பொருந்துமுந் நூலும்
மின்னு மெனவே
விளங்குபட் டழகும்
உந்திச் சுழியும்
உரோமத் தழகும்
தொந்தி வயிறுந்
துதிக்கையுந் தோன்ற
வேதனும் மாலும்
விமலனும் அறியாப்

பாதச் சலங்கைப்
  பலதொனி யார்ப்பத்
தண்டைச் சிலம்பும்
  தங்கக் கொலுசும்
எண்டிசை மண்டலம்
  எங்கும் முழங்கத்
தொகுது துந்துமி
  தொந்தோ மெனவே
தகுதகு திந்திமி
  தாளம் முழங்க
ஆடிய பாதம்
  அண்டர்கள் போற்ற
நாடிமெய் அடியார்
  நாளும் துதிக்கக்
கருணை புரிந்து
  காட்சிதந் தருள
இருளைக் கடிந்து
  எங்கும் நிறையப்

பொங்குபே ரொளியாய்ப்
  பொன்மலை போலத்
திங்கள் முடியான்
  திருவுளம் மகிழ
வந்த வாரணை
  வடிவையும் காட்டிச்
சிந்தை தளர்ந்த
  சிரடி யார்க்கு
இகபர சாதனம்
  இரண்டும் உதவி
அகவினைத் துன்பம்
  அகந்தை அறுத்து
மூலா தார
  முச்சுடர் காட்டி
வாலாம் பிகைதன்
  வடிவையும் காட்டி
மாணிக்க மேனி
  மலர்ப்பதம் காட்டிப்

பேணிப் பணியப்
  பிசாட் சரமும்
ஓமென் றுதித்த
  ஓங்காரத் துள்ளே
ஆமென் றெழுந்த
  அட்சர வடிவும்
இடைபிங் கலைகள்
  இரண்டின் நடுவே
கடைமுனை சுழிமுனைக்
  கபாலமும் குறித்து
மண்டலம் மூன்றும்
  வாயுவோர் பத்தும்
குண்டலி யசைவில்
  கூறிய நாடியும்
பூதமும் பொறியும்
  புகழ்குணம் மூன்றும்
வாதனை செய்யும்
  அறிவையுங் காட்டி

ஆறு தார
அங்குச நிலையைப்
பேருமி நின்ற
பெருமையுங் காட்டிப்
பஞ்ச மூர்த்திகள்
பாகந் தமர்ந்த
பஞ்சசக் திகளின்
பாதமுங் காட்டி
நவ்விட மெவ்வும்
நடுவனை விட்டில்
அவ்வும் ஆக்கினை
அறுதி சதாசிவம்
மைவிழி ஞான
மனோன்மணி பாதமும்
நைவினை நறுகா
நாத கீதமும்
கண்டு வணங்கக்
கண்ணைத் திறந்து

வின்தல மான
  வெளியையுங் காட்டி
ஐம்பத் தோரெழுத்
  தட்சர நிலையை
இன்பச் சக்கர
  விதிதனைக் காட்டிப்
புருவ நடுவப்
  பொற்கம லாசனன்
திருவிளை யாடலின்
  திருவடி காட்டி
நாதமும் விந்தும்
  நடுநிலை காட்டிப்
போத நிறைந்த
  பூரணங் காட்டி
உச்சி வெளிதனி
  லுள்ளொளி காட்டி
வச்சிரம் பச்சை
  மரகத முத்துப்

பவளம் நிறைந்த
  பளிங்கொளி காட்டிச்
சிவகயி லாசச்
  சேவையுங் காட்டிச்
சந்தம் பிறந்த
  தலந்தையுங் காட்டித்
தத்துவந் தொண்ணூற்
  றாறையும் நீக்கிக்
கருவி கரணக்
  களங்கம் அறுத்து
பருவிய பிறவி
  மாயையை நீக்கி
உம்பர்கள் இருடிகள்
  ஒருவருங் காணா
அம்பர வெளியின்
  அருளையுங் காட்டிச்
சத்தி பராபரை
  சதானந்தி நிராம

நித்திய ரூபி
நிலைமையுங் காட்டி
அடியவர் ஞானம்
அமிர்தமா யுண்ணும்
வடிவை யறியும்
வழிதனைக் காட்டி
நாசி நுனியில்
நடக்குங் கலைகள்
வாசிவா வென்று
வாங்கிப் பிடித்து
நின்மல வடிவாய்
நிறைவித் தப்புறம்
வின்மய மான
விதத்தையுங் காட்டித்
தராதல முழுதும்
தானாய் நிறைந்த
பராபர வெளியைப்
பணிந்திடக் காட்டி

என்னுடல் ஆவி
யிடம்பொருள் யாவும்
தன்னுடை வசமாந்
தவநிலை காட்டி
நானெனும் ஆணவம்
நாசம தாகத்
தானென வந்து
தயக்கந் தீர
ஆன குருவாய்
ஆட்கொண் டருளி
மோன ஞானம்
முழுது மளித்துச்
சிற்பரி பூரண
சிவத்தைக் காண
நற்சிவ நிட்கள
நாட்டமுந் தந்து
குருவும் சீடனும்
கூடிக் கலந்து

இருவரும் ஒருதனி
இடந்தனிற் சேர்ந்து
தானந்த மாகித்
தற்பர வெளியில்
ஆனந்த போத
அறிவைக் கலந்து
புவனத் தொழிலைப்
பொய்யென் றுணர்ந்து
மவுன முத்திரையை
மனத்தினில் இருத்திப்
பெண்டு பிள்ளை
பண்டு பதார்த்தம்
கண்டது மாயைக்
கனவெனக் காட்டிப்
பாச பந்தப்
பவக்கடல் நீக்கி
ஈசன் இணையடி
யிருத்தி மனத்தே

நீயே நானாய்
நானே நீயாய்க்
காயா புரியைக்
கனவென உணர்ந்து
எல்லாம் உன்செயல்
என்றே யுணர
நல்லாய் உன்னருள்
நாட்டந் தருவாய்
காரண குருவே
கற்பகக் களிறே
வாரண முகத்து
வள்ளலே போற்றி
நித்திய பூசை
நைவேத் தியமும்
பத்தியாய்க் கொடுத்தேன்
பரமனே போற்றி
ஏத்தி யனுதினம்
எளியேன் பணியக்

கூற்றினை யுதைத்த
  குளிர்பதம் தந்து
ஆசு மதுர
  அமிர்தம் அளித்துப்
பேசும் ஞானப்
  பேறெனக் கருளி
மனத்தில் நினைத்த
  மதுர வாசகம்
நினைவினும் கனவினும்
  நேசம் பொருந்தி
திருவள் ளுவரும்
  அவ்வையும் போலக்
கருத்து மிகுந்து
  கவிமழை பொழிய
வாக்குக் கெட்டா
  வாழ்வை யளித்து
நோக்கரும் ஞான
  நோக்கு மளித்து

இல்லற வாழ்வை
யிடையூ றகற்றிப்
புல்ல ரிடத்தில்
புகுந்துழ லாமல்
ஏற்ப திகழ்ச்சி
என்ப தகற்றிக்
காப்ப துனக்குக்
கடன்கண் டாயே
நல்வினை தீவினை
நாடி வருகினும்
செல்வினை யெல்லாஞ்
செயலுன தாமல்
தந்தையும் நீயே
தாயும் நீயே
எமரும் நீயே
ஈசனும் நீயே
போத ஞானப்
பொருளும் நீயே

நாதமும் நீயே
  நான்மறை நீயே
அரியும் நீயே
  அயனும் நீயே
திரிபுர தகனம்
  செய்தவன் நீயே
சக்தியும் நீயே
  சதாசிவம் நீயே
புத்தியும் நீயே
  புராந்தகன் நீயே
பக்தியும் நீயே
  பந்தமும் நீயே
முத்தியும் நீயே
  மோட்சமும் நீயே
ஏகமும் நீயே
  என்னுயிர் நீயே
தேகமும் நீயே
  தேகியும் நீயே

உன்னருளன்றி
  உயிர்த்துணை காணேன்
பின்னொரு தெய்வம்
  பேசவும் அறியேன்
வேதனை கொடுக்க
  மெய்யிது தன்னில்
வாத பித்தம்
  வருத்திடு சிலேத்துமம்
மூன்று நாடியும்
  முக்குணமாகித்
தோன்றும் வினையின்
  துன்பம் அறுத்து
நாலா யிரத்துநா
  னூற்றுநாற் பத்தெண்
மேலாம் வினையை
  மெலியக் களைந்து
அஞ்சா நிலைமை
  யருளியே நித்தன்

பஞ்சாட் சரநிலை
பாலித் தெனக்குச்
செல்வமும் கல்வியும்
சீரும் பெருக
நல்வர மேதரும்
ஞான விநாயகா
சத்திய வாக்குச்
சத்தா யுதவிப்
புத்திர னேதரும்
புண்ணிய முதலே
வெண்ணீ றணியும்
விமலன் புதல்வா
பெண்ணாம் உமையாள்
பெற்றிடுந் தேவே
அரிதிரு மருகா
அறுமுகன் துணைவா
கரிமுக வாரணக்
கணபதி சரணம்

குருவே சரணம்
  குணமே சரணம்
பெருவயிற் றோனே
  பொற்றாள் சரணம் கக௦
கண்ணே மணியே
  கதியே சரணம்
விண்ணே யொளியே
  வேந்தே சரணம்
மானத வாவி
  மலர்ந்தடத் தருகில்
தானத்தில் வாழும்
  தற்பரா சரணம்
உச்சிப் புருவந்
  துதித்துல களிக்கும்
சச்சிதா னந்த
  சற்குரு சரணம்
விக்கின விநாயகா
  தேவே ஓம் ஓம்

## ஸ்ரீ விநாயகர் திருவகவல்

அரஅர சண்முக
பவனே ஓம் ஓம்
சிவசிவ மகாதேவ
சம்போ ஓம்! ஓம்! ௧௯௮

---

# கக. மூத்த நாயனார் திருவிரட்டைமணிமாலை

கபில தேவநாயனார் அருளியது

திருச்சிற்றம்பலம்

வெண்பா

திருவாக்கும் செய்கருமம்
  கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும்
  பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும்
  ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை. க

கட்டளைக் கலித்துறை

கைக்கும் பிணியொடு காலன்
தலைப்படும் ஏல்வையினில்
எய்க்குங் கவலைக் கிடைந்தடைந்
தேன்வெம்மை நாவனைக்கும்
பைக்கும் அரவரை யான்தந்த
பாய்மத யானைபந்துந்
திக்கும் பணிநுதற் கண்திரு
வாளன் திருவடியே. ௨

வெண்பா

அடியமர்ந்து கொள்வாயே
நெஞ்சமே அப்பம்
இடியவலோ டெள்ளுண்டை
கன்னல்—வடிசுவையில்
தாழ்வானை ஆள்வானைத்
தன்னடியா ருள்ளத்தே
வாழ்வானை வாழ்த்தியே வாழ். ௩

### கட்டளைக்கலித்துறை

வாழைக் கனிபல வின்கனி
  மாங்கனி தாஞ்சிறந்த
கூழைச் சுருள்குழை யப்பமெள்
  ளுண்டையெல் லாந்துறுந்தும்
பேழைப் பெருவயிற் றோடும்
  புகுந்தென் னுளம்பிரியான்
வேழத் திருமுகத் துச்செக்கர்
  மேனி விநாயகனே. ௪

### வெண்பா

விநாயகனே வெவ்வினையை
  வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கைதணி
  விப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும்
  நாதனுமாந் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து. ௫

கட்டளைக் கலித்துறை

கனிய நினைவொடு நாடொறுங்
  காதற் படுமடியார்க்
கினியன் இனியொரு வின்றுங்
  கிலம்எவ ரும்வணங்கும்
பனிவெண் பிறைநறுங் கொன்றைச்
  சடைப்பலி தேரியற்கை
முனிவன் சிறுவன் பெருவெங்கோல்
  யானை முகத்தவனே. ௬

வெண்பா

யானை முகத்தான்
  பொருவிடையான் சேய்அழகார்
மான மணிவண்ணன்
  மாமருகன்—மேனிகழும்
வெள்ளக் குமிழி
  மதத்து விநாயகன்என்
உள்ளக் கருத்தின் உளன். ௭

கட்டளைக் கலித்துறை

உளதள வில்லதொர் காதல்என்
நெஞ்சில்வன் னஞ்சமுண்ட
வளரிள மாமணி கண்டன்வன்
டாடுவன் கோதைபங்கத்
திளவளர் மாமதிக் கண்ணியெம்
மான்மகன் கைம்முகத்துக்
களகள மாமதஞ் சேர்களி
யானைக் கணபதியே. ௮

வெண்பா

கணங்கொண்ட வல்வினைகள்
கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட்
சடைமேல்—மணங்கொண்ட
தாதகத்த தேன்முரலுங்
கொன்றையான் தந்தளித்த
போதகத்தின் தாள்பரவப் போம். ௯

கட்டளைக் கலித்துறை

போகபந் தத்தந்த மின்றிநிற்
பிர்புனை தார்முடிமேல்
நாகபந் தத்தந்த நாளம்
பிறையிறை யான்பயந்த
மாகபந் தத்தந்த மாமழை
போல்மதத் துக்கதப்போர்
ஏகதந் தத்தெந்தை செந்தா
ளிணை பணிந் தேத்துமினே. ௧௦

வெண்பா

ஏத்தி யெனதுள்ளம்
நிற்குமால் எப்பொழுதும்
மாத்தனிவெண் கோட்டு
மதமுகத்துந் - தூத்தழல்போல்
செக்கர்த் திருமேனிச்
செம்பொற் கழலைங்கை
முக்கட் கடாயானை முன். ௧௧

கட்டளைக் கலித்துறை

முன்னிளங் காலத்தி லேபற்றி
னேன்வெற்றி மீனுயர்த்த
மன்னிளங் காமன்றன் மைத்துன
னேமணி நீலகண்டத்
தென்னிளங் காய்களி றேஇமை
யோர்சிங்க மேஉமையாள்
தன்னிளங் காதல னேசர
ணுஉன் சரணங்களே. கஉ

வெண்பா

சரணுடையே னென்று
தலைதொட் டிருக்க
முரணுடையே னல்லேன்நான்
முன்னந் - திரள்நெடுங்கோட்
டண்டத்தான் அப்புறத்தான்
ஆனைமுகத் தான்அமரர்
பண்டத்தான் தாள்பணியாப்
பண்டு. கங

கட்டளைக் கலித்துறை

பண்டந்த மாதரத் தானென்
  றினியன வேபலவுங்
கொண்டந்த நாள்குறு காமைக்
  குறுகுவர் கூருணர்விற்
கண்டந்த நீண்முடிக் கார்மத
  வார்சடைக் கற்றையொற்றை
வெண்டந்த வேழ முகந்தெம்
  பிரானடி வேட்கையரே. கச

வெண்பா

வேட்கை வினைமுடித்து
  மெய்யடியார்க் கின்பஞ்செய்
தாட்கொண் டருளும்
  அரன்சேயை - வாட்கதிர்கொள்
காந்தார மார்பிற்
  கமழ்தார்க் கணபதியை
வேந்தா வுடைத்தமரர் விண். கரு

கட்டளைக் கலித்துறை

விண்ணுத னுங்கிய விண்ணுமண்
ணுஞ்செய் வினைப்பயனுங்
கண்ணுத னுங்கட னென்பர்மெய்
யன்ப ரகமமர்ந்த
கண்ணுத னுங்கிய நஞ்சமுண்
டார்கரு மாமிடற்றுப்
பெண்ணுத னுப்பிரி யாவொரு
பாகன் பெருமகனே. ௧௬

வெண்பா

பெருங்காதல் என்னோடு
பொன்னோடை நெற்றி
மருங்கார வார்செவிகள்
வீசி - ஒருங்கே
திருவார்ந்த செம்முகத்துக்
கார்மதங்கள் சோர
வருவான்றன் நாமம் வரும். ௧௭

### கட்டளைக் கலித்துறை

வருகோட் டருபெருந் தீமையுங்
காலன் தமரவர்கள்
அருகோட் டருமற வான்மையுங்
காய்பவன் கூர்ந்தவன்பு
தருகோட் டருமர பிற்பத்தர்
சித்தந் தறியணையும்
ஒருகோட் டிருசெவி முக்கட்செம்
மேனிய வொண்களிறே. ௧௮

### வெண்பா

களியானைக் கன்றைக்
கணபதியைச் செம்பொன்
ஒளியானைப் பாரோர்க்
குதவும் - அளியானைக்
கண்ணுவதும் கைந்தலங்கள்
கூப்புவதும் மற்றவன்றாள்
நண்ணுவதும் நல்லார் கடன். ௧௯

கட்டளைக் கலித்துறை

நல்லார் பழிப்பில் எழிற்செம்
பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக
மேபுர மூன்றெரித்த
வில்லா னளித்த விநாயக
னேயென்று மெய்ம்மகிழ
வல்லா ரகத்தன்றி மாட்டா
ளிருக்க மலர்த்திருவே. ௨௦

திருச்சிற்றம்பலம்

―――――

## கக. அதிராவடிகள் அருளிய
## மூத்த பிள்ளையார்
## திருமும்மணிக் கோவை

திருச்சிற்றம்பலம்

அகவல்

ஒருநெடுங் கங்கை
 இருங்குறும் பைம்புகர்
மும்முகச் செந்நுதி
 நாலினார் வெண்ணிணக்
குடற்புலவு கமழும்
 அடற்கழுப் படையவன்
மதலே மாமதந்
 துவன்றிய கதனுடைக்
கடதடக் கபோலத்
 தோரிட மருப்பிற்

கரண்டக வுதரத்து
முரண்டரு குழவிதன்
சேவடி யுகள மல்ல
தியாவையு மிலமினி
யிருநிலத் திடையே. க

வெண்பா

நிலந்துளங்க மேருந்
துளங்க நெடுவான்
தலந்துளங்கச் சப்பாணி
கொட்டும்—கலந்துளங்கொள்
காமாரி யீன்ற
கருங்கைக் கடதடத்து
மாமாரி யீன்ற மணி. உ

கட்டளைக் கலித்துறை

மணிசிந்து கங்கைதன் மானக்
குருளையை வாளரக்கர்

அணிசிந்த வென்றளம் ஐயர்க்
கிளங்கன்றை அங்கரும்பின்
துணிசிந்த வாய்ப்பெய்த போதகத்
தைத்தொடர்ந் தோர்பிறவிப்
பிணிசிந்து கான்முனை யைப்பிடித்
தோர்க்கில்லை பேதுறலே. ௩

அகவல்

பேதுறு தகைய
மல்லந் நிதுறச்
செக்கர்க் குஞ்சிக்
கருநிறத் தொக்க
னுப்பன் புக்கவ
விரும்பொழிந் தடக்கையு
முரணிய பெருந்தோட்
கொட்ட நாள்வி தேவுதன்
மட்டுகு தெரிய
லடிமனந் தனமே. ௪

வெண்பா

மேய வருமிடற்றர்
 வெள்ளெயிற்றர் நின்சேனை
ஓய மணியூச
 லாடின்றே—பாய
மழைசெவிக்காற் றுந்திய
 வாளமர்க்கண் எந்தை
தழைசெவிக்காற் றுந்தத் தளர்ந்து.

கட்டளைக் கலித்துறை

உந்தத் தளரா வலைத்தன
 முன்னன்மின் னுடைநெற்றிச்
சந்தத் தளரா வொருதனித்
 தெவ்வன்றன் தாளிரியூர்
விந்தத் தளரா மருங்கிற்
 கிளிபெற்ற வேழக்கன்றின்
மந்தத் தளரா மலர்ச்சர
 ணங்கள் வழுத்துமினே. ௯

அகவல்

மின்னெடுங் கொண்ட
லந்நெடு முழக்கத்
தோவற விளங்கிய
துளைக்கைக் கடவுளை
யாமிக வழுத்துவ
தெவனோ அவனேற்
பிறந்த திவ்வுலகின்
பெருமூ தாதை
யுரந்தரு சிரமரிந்
தவற்கே வரைந்தது
மேருச் சிமையத்து மீமிசை
வாரிச் செல்வன்
மகன்மகன் மொழியே எ

வெண்பா

மொழியின் மறைமுதலே
முந்நயனத் தேறே

கழியவரும் பொருளே
கண்ணே - செழிய
கலாலயனே எங்கள்
கணபதியே நின்னை
யலாலையனே குமாரதேவ னன்பு. ௮

கட்டளைக் கலித்துறை

அன்புத வச்சுற்ற காறழல்
கொண்டெயில் மூன்றெரிய
வன்புத வத்துந்தை மாட்டுநின்றான்
மதஞ்சூழ் மருப்பிற்
கன்புத வக்கரத் தாளமிட்
டோடிக் கடுநடையிட்
டின்புத வச்செற்று நீயன்று
காத்த தியம்புகவே. ௯

அகவல்

கவவுமணிக் கேடகக்
கங்கணக் கைவளை

வறைகழ லவுணரொடு
 பொருத ஞான்றுநின்
புழைக்கர முயிர்த்த
 வழற்பே ரூதை
வரை நனி பிளிறி மூரி
யஞ்சேறு புலர்த்து மென்பர்
மஞ்சேறு கயிலை
 மலைகிழ வோயே. ௧௦

வெண்பா

மலைசூழ்ந் திழிகின்ற
 மாசுணம் பொற்பாறைத்
தலைசூழ்ந்து தானிளைப்ப
 தொக்கும் - கலைசூழ்
திரண்டகங்கொள் பேரறிவன்
 றின்வயிற்றி னும்பர்க்
குரண்டகங்கொள் காலுயிர்க்குங்
 [கை, ௧௧

கட்டளைக் கலித்துறை

காலது கையது கன்னது
  தியது கார்மதநீர்
மேலது கீழது நாலது
  வெற்பது பொற்பமைதிம்
பாலது தேனது நானது
  மென்மொழிப் பாவைமுட்பூண்
வேலது வாளது நான்மறைக்
  கின்ற விடுசுடர்க்கே. கஉ

அகவல்

சுடர்ப்பிழம்பு தழைத்த
  அழற்றனி நெடுவேற்
சேய்மூ வுலகமும்
  வலம்வர வேய
கொன்றையம் படலை
  துன்றுசடைக் கனிந்த

ஓங்கிருந் தாதையை
வளாஅய் மாங்கனி
அள்ளற் றீஞ்சுவை யருந்திய
வள்ளற் கிங்கென்
மனங்கனிந் திடுமே. ௧௩

வெண்பா

இக்கயங்கோன் மூவலயஞ்
சூழேழ் தடவரைகள்
திக்கயங்கள் பேர்ந்தாடச்
செங்கீரை - புக்கியங்கு
தேனுடை வண்டாடச்
செங்கீரை யாடின்றே
வானுடன் பெற்ற வரை. ௧௪

கட்டளைக் கலித்துறை

பெற்றமெல் லோதி சிலம்பின்
மகள்பெறப் பிச்சுகந்த
மற்றவள் பிச்சன் மயங்கன்முன்
ஞேன்பின் னிளைமைமிக்,

கற்றவ ளையன் புறங்காட்
டிடை நட மாட்டுகந்தோன்
செற்றவெண் டந்தத் தவனம்மை
யாட்கொண்டு செய்வதெனே. ௧௫

அகவல்

செய்தரு பொலன்படை
மொய்தரு பருஉக்குருளை
வெள்ளெயிறு பொதிந்த
வள்ளுகிர்த் திரள்வாய்ப்
பெருந்திரட் புழைக்கை
மண்முழை வழங்குந்
திண்முர ணோற்றின்
பணையடற் பாகன் றனதிணை
நெடும் பொற் சரணமேத்த
இடும்பைப் பௌவ
மினிநீந் தலமே. ௧௬

வெண்பா

அலங்கன் மணிகளக
 முந்தி யருவி
விலங்கன் மிசையழிவ
 தொக்கும் - பலங்கனிகள்
உண்டளைந்த கோன்மகுடத்
 தொன்கடுக்கைத் தாதளைந்து
வண்டளைந்து சோரும் மதம். கஎ

கட்டளைக் கலித்துறை

மதந்தந்த மென்மொழி மாமலை
 யாட்டி மடங்கல்கொன்ற
மதந்தந்த முக்க ணரற்குமுன்
 னின்றவம் மாமலைபோன்
மதந்தந்த கும்பக் குழவிமந்
 தாரப்பொன் னூட்டிருந்து
மதந்தந்த செம்மலன் ஞேவைய
 முய்ய வளர்கின்றதே. கஅ

அகவல்

வளர்தரு கவட்டின்
கிளரொளிக் கற்பகப்
பொதும்பர்த் தும்பி
யொழிவின் றோச்சும்
பாரிடைக் குறுநடைத் தோடி
ஞாங்கர் இட்ட மாங்கனி
முழுவதும் விழுங்கிய
முனைப்பனைத் தடக்கை
எந்தையல் லதுமற் றியாவுள
சிந்தை செய்யுந்
தெய்வதம் நமக்கே. ௧௧

வெண்பா

கேளுற் றியான்தளர
வொட்டுமே கிம்புரிப்பூண்
வாளுற்ற கேயூர
வாளரக்கர் - தோளுற்

றறுத்தெறிந்து கொன்றழித்தே
யங்கையங்கண் மீள
இறுத்தெறிந்து கொன்றழிந்த ஏறு.

கட்டளைக் கலித்துறை

ஏறு தமீஇயளம் புந்தேள்
மருகளங் குந்தவள
நீறு நமீஇயளன் தோளவன்
செல்வவன் றுன்னநெக்க
ஆறு தமீஇய கரதலத்
தையநின் றன்னையல்லால்
வேறு தமீஇத்தொழு மோவணங்
காத வியன்சிரமே. உக

அகவல்

சிரமே, விசும்பு போத வுயரியிரண்
டசும்புபொழி யும்மே
கரமே, வரைத்திரண் முரணிய
விரைத்துவி ழும்மே

புயமே, திசைவிளிம்பு கிழியச்
சென்றுசெறிக் கும்மே
அடியே, இடந்தொறும் இவ்வுல
கும்பெய ரும்மே
ஆயினும், அஞ்சுடர்ப்
பிழம்பு தழீஇ
நெஞ்சகத் தொடுங்குமோ
நெடும்பணைச் சூரே. ௨௨

வெண்பா

சூர்தந்த பொற்குவட்டின்
சூளிகையின் வானயிர்த்து
வார்தந் தெழுமதியின்
மன்னுமே - சீர்தந்த
மாமதலை வான்மதியங்
கொம்பு வயிற்றுதித்த
கோமதலை வான்மதியங் கொம்பு.

திருச்சிற்றம்பலம்

# கஉ. நம்பியாண்டார் நம்பி

## அருளிய

# திருநாரையூர் விநாயகர்

# திருவிரட்டை மணிமாலை

திருச்சிற்றம்பலம்

### வெண்பா

என்னை நினைந்தடிமை
கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத்
தருகின்றான்—புன்னை
விரசுகமழ் சோலைவியன்
நாரையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான். ௧

## கட்டளைக்கலித்துறை

முகுந்தாற் கரியனென் றுலுந்
தனையே முயன்றவர்க்கு
மிகுந்தான் வெளியனென் றே
மெய்ம்மை
உன்னும் விரும்படியார்
அகத்தான் திகழ்திரு நாரையூர்
அம்மான் பயந்தஎம்மான்
உகந்தா னவன்ற னுடலம்
பிளந்த ஒருகொம்பனே. ௨

## வெண்பா

கொம்பனைய வள்ளி
கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை
நாரையூர்—நம்பனீரே!

தன்னவலஞ் செய்துகொளுந்
 தாழ்தடக்கை யாயென்நோய்
பின்னவலஞ் செய்வதென்னோ
 பேசு. ௩

கட்டளைக்கலித்துறை

பேசத் தகாதன பேயெரு
 தும்பெருச் சாளியும்என்
றேசத் தகும்படி யேறுவதே
 இமை யாதமுக்கட்
கூசத் தகுந்தொழில் நுங்கையும்
 நுந்தையும் நீயுமிந்தத்
தேசத் தவர்தொழு நாரைப்
 பதியுட் சிவக்களிறே. ௪

வெண்பா

களிறு முகத்தவனைக்
 காயுஞ்செந் தீயின்

ஒளிறும் உருக்கொண்ட
தென்னே—அளறுதொறும்
பின்னுரை யூரார
லாரும் பெரும்பழன
மன்னுரை யூரான் மகன். ௫

கட்டளைக்கலித்துறை

மகத்தினின் வானவர் பற்கண்
சிரந்தோள் நெரித்தருளுஞ்
சுகத்தினி னீள்பொழில் நாரைப்
பதியுட் சுரன்மகற்கு
முகத்தது கைஅந்தக் கையது மூக்
கந்த மூக்கதனின்
அகத்தது வாய்அந்த வாயது
போலும் அடுமருப்பே. ௬

வெண்பா

மருப்பையொரு கைக்கொண்டு
நாரையூர் மன்னும்

பொருப்பையடி போற்றத்
துணிந்தால் - நெருப்பை
அருந்தஎன் னுகின்றஎறும்
பன்றே அவரை
வருந்தஎன் னுகின்ற மலம். எ

கட்டளைக் கலித்துறை

மலஞ்செய்த வல்வினை நோக்கி
யுலகை வலம்வருமப்
புலஞ்செய்த காட்சிக் குமரற்கு
முன்னே புரிசடையோற்
சலஞ்செய்த நாரைப் பதியவன்
றன்னைக் கனிதரவே
வலஞ்செய்து கொண்ட மதக்களி
றேயுனை வாழ்த்துவனே. அ

வெண்பா

வனஞ்சாய வல்வினைநோய்
நீக்கி வனசந்

தனஞ்சா யலைத்தருவா
னன்றே - யினஞ்சாயத்
தேரையூர் நம்பர்மகன்
திண்டோள் நெரித்தருளும்
நாரையூர் நம்பர்மகனும். ௧

கட்டளைக்கலித்துறை

நாரணன் முன்பணிந் தேத்தநின்
றெல்லை நடாவியவத்
தேரண வுந்திரு நாரையூர்
மன்னு சிவன்மகனே
காரண னேஎம் கணபதி
யேநற் கரிவதனா
ஆரண நுண்பொரு ளேஎன்
பவர்க்கில்லை அல்லல்களே. ௧௦

வெண்பா

அல்லல் களைந்தான்ற
னம்பொ னுலகத்தி

னெல்லை புகுவிப்பா
மீண்டுழவர்-நெல்லல்க
செங்கழுநீர் கட்டுந் [ளைச்
திருநாரை யூர்ச்சிவன்சேய்
கொங்கெழுதா ரைங்கரத்த கோ.

கட்டளைக்கலித்துறை

கோவிற் கொடிய நமன்றமர்
கூடா வகைவிடுவன்
காவிற் றிகழ்திரு நாரைப்
பதியிற் கரும்பனைக்கை
மேவற் கரிய விருமதத்தொற்றை
மருப்பின் முக்கண்
ஏவிற் புருவத் திமையவள்
தான்பெற்ற யானையையே. ௯௨

வெண்பா

யானைத் தியவெண்பா
என்னை நினைந்தடிமை

தானேச னுய்த்தனக்கு
நல்கினான் - தேனே
தொடுத்தபொழில் நாரையூர்ச்
சூலம்வல னேந்தி
எடுத்த மதமுகத்த ஏறு. க௩

கட்டளைக்கலித்துறை

ஏறிய சீர்வீர நற்குடி
ஏந்திழைக் கும்பிருந்தேன்
நாறிய பூந்தார்க் குமரற்கும்
முன்னினை நன்னாலரைச்
சீரிய வெம்பணைச் சிங்கத்
தினுக்கிளை யானை விண்ணோர்
வேறியல் பால்தொழு நாரைப்
பதியுள் விநாயகனே. க௪

வெண்பா

கனமதில்சூழ் நாரையூர்
மேவிக் கசிந்தார்

மனமருவி னுன்பயந்த
வாய்ந்த - தினமருவு
கூசாரம் பூண்டமுகக்
குஞ்சரக்கன் றென்றுரக்கு
மாசார மோசொல்லு வான். ௧௫

கட்டளைக்கலித்துறை

வானிற் பிறந்த மதிதவ
ழும்பொழின் மாட்டளிசூழ்
தேனிற் பிறந்த மலர்த்திரு
நாரைப் பதிதிகழுங்
கோனிற் பிறந்த கணபதி
நன்னைக் குலமலையின்
மானிற் பிறந்த களிறென்
றுரைப்பரிவ் வையகத்தே. ௧௬

வெண்பா

வையகத்தார் ஏத்த
மதில்நாரை யூர்மகிழ்ந்து

பொய்யகத்தார் உள்ளம்
புகலொழிந்து - கையகத்தோர்
மாங்கனிதன் கொம்பண்டம்
பாசமழு மல்குவித்தா
ணுங்கனிநஞ் சிந்தையமர் வான்.

கட்டளைக்கலித்துறை

அமரா அமரர் தொழுஞ்சரண்
நாரைப் பதியமர்ந்த
குமரா குமரற்கு முன்னவ
னேகொடித் தேரவுணர்
தமரா சறுத்தவன் றன்னுழைத்
தோன்றின னேஎனநின்
றமரா மனத்தவர் ஆழ்நர
கத்தில முந்தவரே. ௧௮

வெண்பா

அவமதியா துள்ளமே
அல்லலற நல்ல

தவமதியால் ஏந்திச்
சதுர்ந்தோம்-நவமதியாங்
கொம்பன் விநாயகன்கொங்
கார்பொழில்சூழ் நாரையூர்
நம்பன் சிறுவன்சீர் நாம். ௧௧

கட்டளைக்கலித்துறை

நாந்தன மாமனம் ஏந்துகண்
டாயென்று நாண்மலரார்
தாந்தன மாக விருந்தநன்
னூரைப் பதிதனுள்ளே
சேர்ந்தன னேஐந்து செங்கைய
னேநின் திரள்மருப்பை
ஏந்தின னேஎன்னை யாண்டவ
னேஎனக் கென்னையனே. ௨௦

திருச்சிற்றம்பலம்

# கரு. சிவஞான தேசிகர்
## அருளிய
# காசித்துண்டிவிநாயகர்
# திருவருட்பா

திருச்சிற்றம்பலம்

சீர்கொண்ட காசிநகர்
  சேர்துண்டி ராசனெனும்
பேர்கொண்ட வைங்கரற்குப்
  பேசுபுகழ்த் - தார்கொண்ட
நற்றிருப்பாட் டீரைந்து
  ஞாலமிசைத் தொண்டரெலாம்
கற்றிருப்பார் மேலாங் கதி.

———

## ௧௧ காசித்துண்டி விநாயகர்

ஓங்கார வடிவான
வுன்பாத தாமரையு
முபயபரிபுர மறைகளும்

உதிக்கின்ற செங்கதிர்க
ளொருகோடி நிகரொளியு
முந்தாள நீற்றி னொளியும்

பாங்கார்க சானனமு
முக்கரமும் வளர்புயப்பவ
ளாசலங்க ளுன்கும்

பாசமுடனங்கு சங்கோம்
போரிலட்டு கம்பட்ச
மொடுவைத்த கரமும்

நீங்காத வருண்மாரி
பொழியுந்த்ரி யம்பகமு
நிறையுமும் மதமாரியும்

நீள்சடா டவியும் வெண்
பிறையுமொரு தொந்தியும்
நெஞ்சிலொரு காலுமறவேன்
காங்கேயன் மகிழ்தமைய
னேகங்கை நதிபெருகு
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே. ௪

அருளா லுருக்கொண்ட
ஆனந்த வெள்ளமே
அனந்தசூரிய ருதயமே
ஆயிரங் கோடிசந்
திரருதய மேயின்ப
மானமழை பொழிமேகமே
திருவே பெருஞ்செல்வ
மேகாம தேனுவே
சிந்தாமணிக் குவியலே

## ௬௮ காசித்துண்டி விநாயகர்

தேனுவின் பாலுடன்
கற்பகப் பூவிலெழு
செந்தேன் கலந்தகடலே
தருவான கற்பகச்
சோலையே யெல்லாந்
தரும்பெரிய பதுமநிதியே
சங்கநிதி யேயுன்னை
யுன்னத் தெவிட்டாத
தன்னமிர்த வநிமதுரமே
சுருகூல மேயென்
றுனைப்பாடி யுருகவருள்
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே. ௨
உன்னொருகை யிற்கொம்பு
வெள்ளியங் கயிலையா
மொருகனக் கிம்புரிக்கொம்

புயர்மேரு கிரியாகு
மேனிசெவ் வானமா
மோங்குகங் கணமனந்தன்
வன்னிரவி சந்திரன்
திருநயன மேழெனு
மகாசலதி கண்முமதம்
வளர்சண்ட மாருதஞ்
செவிமாரு தஞ்சக்ர
வாளகிரி நீடுதிக்கை
பன்னுநான் மறைபிலம்
போங்குகா லாக்கினி
பரந்தநற் கோபாக்கினி
பரிபாக ரைக்கொண்டு
குற்றேவல் கொள்கின்ற
பரப்பிரம மத்தகசநீ
கன்னெஞ்ச னேன்மலக்
காட்டைமுறி யாததென்
காசிவாழ் துண்டிராச

கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே. ௬
குஞ்சரக் கன்று நீ
யொழியாம னிற்கின்ற
கூடமென் னிதயவெளியாங்
குழந்தைவடி வாமிளைய
பன்னிருகை மழகளிறு
கூடவிளை யாடிநிற்க
அஞ்சுதொழி லுனதுவிளை
யாட்டாக மதசல
மருள்கிரியை ஞானமிச்சை
யாகவைந் தொழினடந்
தசராதி நாதவொலி
யானையுன் பெருமுழக்கா
நெஞ்சினிறை வாந்திரோ
தானகோ பந்தைநீ
நீக்கியென் றற்போதமாய்

நிறைகவள மருள்வாயி
னுண்டு கர்ச்சித்து
நிமகிழ்வதென் றேசொலாய்
கஞ்சன்முத லோர்தொழக்
கங்கைநதி சூழ்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே. ௪

தேவர்கண பதிவித்தி
யாதரர்கள் கணபதி
சிவயோக முனிகணபதி
சித்தர்கண பதிபூதர்
கணபதி ஞானமே
திகழிராக் கதர்கணபதி
கேவலமி லசுரர்கண
பதிகருடர் கணபதி
கிளர்தயித் தியர்கணபதி

கின்னரர்கள் கணபதி
கிம்புருடர் கணபதி
செந்நருவ ராங்கணபதி
பாவமறு போக பூ
மியர்கள்கண பதியம்ப
ரத்தில்வாசி கள்கணபதி
பசாசர்கண பதியுடக்
கணபதி யியக்கர்கண
பதியுரக ராங்கணபதி
காவலென் றுரைசெய்பதி
னென்கண பதிப்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே.

இருவருக் கரிதாகி
யெங்குநிறை தந்தையா
மேகபரி பூரணர்க்கும்

இந்திராதி முப்பத்து
முக்கோடி தேவர்க்கு
மெண்ணிலா முனிவருக்குந்
தருமணிக ளொளிவிடுங்
கணைறைப டவியுரக
சயனத்து மாமனார்க்குஞ்
சதுரான னர்க்குமெண்
டிசைநாய கர்க்கும்வளர்
சகலபுவ னங்களுக்கும்
ஒருபூர ணப்பிரம
மேயென் றுனைத்துதித்
துவப்போடு தங்கள்சென்னி
உபயகர மேற்கொண்டு
குட்டியே நற்றொழில்க
ளொன்றுசெயல் வேண்டு
கருதரிய நின்புகழை [மென்றால்
யெளியனே னறிவனோ
காசிவாழ் துண்டிராச

கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணாநிதிக்கடவுளே.

அன்னாவு னவிமுத்த
மகலா திருந்துமரு
ளாங்கங்கை நதிபடிந்தும்
ஐங்கரந் தெய்வமு
னடித்தா மரைப்பூவை
யர்ச்சித் திருந்துமடியேன்
மன்னாதி நாதாந்த
மானதே காதிப்ர
பஞ்சமெல் லாமறந்தே
மகோதய மனோலயா
னந்தவாழ் வடையாமன்
மாணுமெய்ப் பிணியிலுற்றும்
என்னாத வெண்ணங்க
ளெண்ணியும் பகலிலே
யிருளின்மூழ் கிக்கிடந்தும்

யானென்று மெனதென்றும்
முன்னிலேயை நாடியு
மேய்மியிடர் படலீரியோ
கன்றுள னேயுனேக்
கண்டுகுறை தீரவருள்
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணு நிதிக்கடவுளே. எ

உன்றுருவை யும்முனக்
கிளேயவன் றுருவையு
முன்றந்தை யருளுருவையும்
உன்னன்னே யுருவையு
முன்னடிய ருருவையு
மொன்றென்ப ளிந்தவுருவை
இன்னமென் கண்கொண்டு
கண்டிடவு மெய்யடிய
ரேவல்செய் தேதிரியவும்

இணையடிக ளென்சென்னி
வைந்திடவு மருள்பெறவு
மின்பவா ரிதிமூழ்கவும்
அன்னையின் ஸையையா
நரிப்பதென வேயென்னை
யாதரிந் தேவல்கொளவும்
ஆசைவைத் தேனிந்த
ஆக்கைவிழு முனமிந்த
ஆசைநிரப் பெறுவனோ
கள்ளெஞ்ச னேன்முன்பு
நீவருவ தெந்தநாள்
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே.
இரவில்லை பகலில்லை
யிலாபசே தங்களில்லை
இன்பதுன் பங்களில்லை

யானில்லை யெனநில்லை
இதமில்லை யகிதமிலை
எண்டிசைகள் காலமில்லை
வரவில்லை போக்கில்லை
பாவபுண் ணியமில்லை
மரணபி றப்புமில்லை
மண்ணாதி யாசையிலை
மனமான பேயில்லை
மலமாயை யில்லையென்று
பரவுபட் டப்பக
லெனும்பெரிய வன்வடிவு
பார்த்திருக் கின்றவடியார்
பாததா மரைபரவி
நானுமவர் போலுனைப்
பார்க்கவர மென்றருளுவாய்
கரதலா மலகமென
முத்தியருள் கங்கைசூழ்
நூசிவாழ் துண்டிராச

கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணா நிதிக்கடவுளே. க

தேகபா ரம்பொறுக்
கப்படுவ தில்லையென்
செய்குவேன் றெய்வமேயுன்
திருவடித் தாமரையை
நம்பினே னியலாற்
றிக்குவே றில்லையுலகில்
ஆகமா காதுசியென்
றருவருத்த பேர்க்கருள்
வேனெனுஞ் சொல்பொய்யோ
ஐயவுனை மறவாத
ஆனந்த வாழ்வன்றி
யமரர்வாழ் வும்விரும்பேன்
பாகமே யில்லாத
நான்வார ணாசியிற்
பரவுமொரு மணிகர்ணிகைக்

பாகீ ரதிக்குள்ள
நாயாச மாகமெய்ப்
பாரம்விட வருளளிப்பாய்
காகமா தியசரா
சரமெலாங் கதிபெறுங்
காசிவாழ் துண்டிராச
கணபதியெ னும்பெரிய
குணமேரு வேயருட்
கருணை நிதிக்கடவுளே. கO

காசித்துண்டி விநாயகர் திருவருட்பா
முற்றிற்று.

---

# கச. விநாயக மூர்த்தி பதிகம்

[பன்னிருசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்]

சீர்கொண்ட கிரணசந்
திரசடா மகுடமுந்
திரியம்ப காம்போஜமுந்
திடகரட கடவிகட
ஜயகும்ப கெம்பீர
திவ்யகுஞ் சரவதனமுந்
தார்கொண்ட பரிமள
சதுர்ப்புய விலாசமுந்
தரளவெக் ஞோபவீத

துடமார்ப லம்போ
தரப்ரவா கமுமுசிக
தவளாம்ப ரானந்தமுங்
கூர்கொண்ட பாசாங்
குசாஸ்தமுங் கிண்கிணி
குலுங்குபத முங்காண்டியான்
கும்பிட் டிறைஞ்சவருள்
கூர்ந்துதவ வேண்டுநய
குணசகல பரிபூரணு
வார்கொண்ட களபதன
வல்லபை மனோகரா
வளமுறுந் துறைகடோறு
மருவுபிர ணவவேத
சொருபசம ரசநீத
வரதசிவ கண நாதனே.

[நேரிசை வெண்பா]

சிற்றுணர்வாற் குற்றமென்ன
செய்துளே னேனுமவை
முற்றுமினி நீபொறுத்தென்
முன்னிற்பாய்-கற்றுயர்ந்தோர்
புந்திதனிற் றோன்றிப்
பொழியுங் கருணைமதந்
தந்திமுகப் பிள்ளாய் சரண். க

சரணமலர் வாழ்த்தித்
தமிழ்ச்சொலப் பெற்றார்க்கு
மரணபவ மாற்று
மருந்தே-யிரணவரைக்
கொப்போதுந் தும்பிமுகத்
தோங்காரத் துட்பொருளே
எப்போதுங் காப்பா யெனை. உ

எனைத்துந் திருவருளா
லின்றளிக்குந் தேவே

நினைந்தன் பொடுதுதித்து
நின்றோர் - வினைத்துன்ப
மாற்றுங் கயமுகத்து
வள்ளால் விரைந்தெனையீ
டேற்றுஞ் சமைய மிது. ௩

சமையந் தொறுநிறைந்த
தற்பரமே யன்பர்க்
கமையுந் தனித்தெள்
ளமுதே - யுமைதந்த
கண்மணியே யானைமுகக்
கற்பகமே பேரின்ப
விண்மணியே யாள்வாய் விரைந்து. ௪

விரைததும்பு ஞானமத
வேழமுகத் தெந்தா
யுரைகடந்து நின்ற
வொளியே - வரைவிளங்கப்

பாரதத்தை முன்னெழுதும்
பாசாங் குசகரனே
கோரத்தை மாற்றியருள் கூர். ௯

கூரியவேற் கண்ணார்
கொடியமய லைத்தவிர்த்துச்
சீரியபே ரின்பத்
திறனருளிப் - பாரிலெனை
நீயடிமை கொண்டு
நிதங்காத் திடல்வேண்டும்
தூயமத வேழமுகத் தோய். ௧௦

தோயுங் களப
சுகந்தமட வார்விரகப்
பேயுங் கவலைப்
பிணியுமினி - யோயும்
படிபுரிந்து வேழமுகப்
பண்ணவனே யென்னை
யடிமைகொண்டு நீயாண் டருள். ௧௧

அருளா யுருவா
யருவாய்ப்பே ரின்பந்
தெருளாய் முதியமறை
தேடும் - பொருளாய
தந்திமுகத் தோனே
தமியேன் குறித்தவரம்
வந்தினிது தந்துதவு வாய். அ

வாயாலு னுத்தர்தமை
வாழ்த்திவருந் தாமலெனை
நீயா தரித்து
நிதங்காப்பாய்-வியாத
தொண்டரிதயாம்புயமாந்
தூயமணிக் கோயில்குடி
கொண்டெகனை நாதவருள் கூர்ந்து.

கூர்ந்தமதி தந்தடிமை
கொண் டனையாள் வேதரின்னுந்

சார்ந்தறிய மாட்டாத்
　　தனிக்களிறே - தேர்ந்து
நடைசிறந்த நின்சீர்
　　நவிலுந் திறமை
யுடையதன்றே யென்பிற்
　　　　றுணர்வு. ௧௦

விநாயக மூர்த்தி பதிகம்
முற்றிற்று.

# கரு. திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ்

திருச்சிற்றம்பலம்

## செங்கீரைப் பருவம்

கொங்கலர் நின்னடி
சென்னியில் வைத்துக்
கூப்பிய கையொடு நின்
குளிர்உள மகிழ்தரு
தொழில்புரி காதியர்
கொள்கையின் நிரைநிரையாய்த்
தங்கிய பங்கய
மங்கையர் முதலிய
தபனிய உலகுறையுந்

நையலர் மருமத்
தொய்யில் பரிந்த
தனக்கரி யுலவைகளுள்
திங்களி னொளிர்தன
துலவை நிகர்ப்பன
தேர்தர எதிர்நோக்கித்
திரிவது போலிரு
புறமு மலர்ந்தவிர்
திருமுகம் இனிதசைய
அங்குசம் ஏந்திய
செங்கழு நீர்க்களி
றுடுக செங்கீரை
அணிகிளர் கலைசை ந
கர்க்கு ளிருந்தவன்
ஆடுக செங்கீரை. ௧

---

## தாலப் பருவம்

மலைமக டந்தைஅருள் பாலா
தாலோ தாலேலோ
மதமி குந்திழிக போலா
தாலோ தாலேலோ
அலகி லன்பர்பணி சூலா
தாலோ தாலேலோ
அருள்சு ரந்திடும்வி சாலா
தாலோ தாலேலோ
இலகு கின்றபனி மார்பா
தாலோ தாலேலோ
இனிய மந்திரசொ ரூபா
தாலோ தாலேலோ
பொலிபெ ருங்கருணை யாளா
தாலோ தாலேலோ
புகழ்பெ றுங்கலைசை வாணா
தாலோ தாலேலோ. ௨

———

## சப்பாணிப் பருவம்

பக்குவ முதிர்ந்துசிவ
புண்ணிய நிரம்பிமல
பாகம் பிறந்து சத்தி
பதிந்துவினை யொப்புப்
பழுத்தவர்கள் பந்தநோய்
பாற்றும்ஒரு செங்கை மலரும்

அக்கருணை யடியவர்க
ளுயிருடன் பொருள்காயம்
ஆமெவ் வகைப்பந் தமும்
அங்கீ கரிக்குமோர்
கைம்மலரு மாறுபா
டாதரித் திடுசெய் கையான்

மிக்குறும் பகைமைமேன்
மேலெய்தி யாங்கது
விலக்கத் தமக்கு யர்ந்தோர்

மேதினிக் கின்மையாற்
போராட் டியற்கையின்
மெலியாமல் ஒன்றை ஒன்று
தக்கவுகை தாக்குதல்
கடுப்பக் கவின்செயவெோர்
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச்
செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே. ௫

---

முத்தப் பருவம்

துளி தூங்கு தேந்தொடை
மிலைச்சிய கருங்கூந்தல்
சுவல்மிசைப் புரளநின்று
தொடித்தோள் பெயர்த்தர
மடந்தையர்கள் இருபுறத்
தூமணிக் கவரிவீசத்

தெளிதூங்கு நவமணி
குயிற்றி அணி வாலுளைச்
சிங்கஞ் சுமந்தநவிசில்
செங்கோல் நடாத்தும்இறை
வைப்புமுத லெங்கணுஞ்
செல்லப் பரந்துவிரியும்
அளிதூங்கும் எமதுளப்
பங்கயங் குவியஅது
அல்காமை நிற்குமளவும்
அவிரொளி பெறுதவெம்
முகமதியும் ஆவிப்ப
அமிழ்தம் பொழிந்தாலெனக்
களிதூங்கு நகைநிலவு
சிறிதே அரும்புநின்
கனிவாயின் முத்தம்அருளே
கலைசைநகர் வந்தசெங்
கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்தம்அருளே. ௭

## வருகைப் பருவம்

இருகை யூன்றித்
தவழ்ந்துமழ
ஏற்றின் வருந்தோ
றுங்காங்கே
எறுழ்வன் புழைக்கை
நெட்டுயிர்ப்பான்
இருமா நிலத்தைக்
குழிப்பதுவும்
பெருகுங் கடைக்காற்
செயுஞ் செவிவான்
பிளப்ப தேய்ப்பப்
பல்காலும்
பெயர்ந்து மடங்கி
யசைந்தாடும்
பிடுந் தந்தம்
பொறிதமக்கு

மருவும் புலனை
அவற்றிடமா
மண்ணை அகழ்ந்தும்
வெளிப்பரப்பை
வளைந்துங் கவ்விக்
கொடுத்துதவும்
வண்மை காட்ட
அசைந்தசைந்து
முருகு விரியுந்
தொடைப்புயத்து
முதல்வா வருக
வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே. ரு

உருகும் அடியார்
உள்ளூற

உள்ளே யூறுந்
தேன் வருக
உன்னைத் தெவிட்டச்
சிவானந்த
ஒளியே வருக
புலன்வழிபோய்த்
திருகும் உளத்தார்
நினைவினுக்குச்
சேயாய் வருக
எமையாண்ட
செல்வா வருக
உமையீன்ற
சிறுவா வருக
இணைவிழியாற்
பருகும் அமுதே
வருக உயிர்ப்
பைங்கூழ் தழைக்கக்
கருணைமழை

கஉகூ செங்கழுநீர் விநாயகர்

பரப்பு முகிலே
வருக நறும்
பாகே வருக
வரைபிழிந்த
முருகு வேட்கு
முன் உதிந்த
முதல்வா வருக
வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே.

அம்புலிப் பருவம்

கரும்பினை நெருக்கிநெரி
செய்ததன் தேறலைக்
காற்றுநெட் டாலையக்குங்
கயமுகன் கையகப்
பட்டுநல நீங்குசுரர்
களைகளைய்த் தோன்றியவனைத்

துரும்புபட வென்றழித்
  தவ்வமர ரோடுநின்
  துயருந் தவிர்ந்தளித்த
 சூழ்கருணை நீஅறிவை
  அன்றியும் யாருந்
  தொடங்குதொழி லினிதுமுற்ற
இரும்புவியி லாறுநீர்த்
  தருள்பவனு மிவனலால்
  இல்லையிவ னிசையையின்னும்
 இயம்பிடின் உலப்புரு
  நீங்குநீ வரினுன்பி
  னெய்திடும் பாம்புமனியும்
அரும்பணிக ளொடுவைத்து
  மீண்டுதொட ராதுசெயும்
  அம்புலீ ஆடவாவே
 அருட்குண நிரம்புசெங்
  கழுநீர் மதக்களிறெரு
  டம்புலீ ஆடவாவே. எ

## சிற்றிற் பருவம்

பெருத்த வயிறு
துயங்கமெல்லப்
பெயர்ந்து நடந்து
குடங்கைமிசைப்
பெரும்பண் ணியமும்
ஏந்தியெம்பாற்
பேணி வருநின்
வரவினைக்கண்
டருத்தி யொடுநீ
உண்டபரி
கலசே டத்தை
அடியேங்கட்
களிக்க வருவாய்
என்றுவகை
அரும்பி வழிபார்த்
திருந்தேமை

வருந்தல் அழகோ
விக்கினஞ்செய்
மன்னனெனும்பேர்
பேதையரேம்

மாட்டுத் தெரிப்ப
தொருபுகழோ
மடவார் ஊடல்
மவுணரென்றும்

திருத்துங் கலைச்
செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில்
சிதையேலே

தெள்ளித் தெளிந்தோர்க்
கள்ளூறுஞ்
செல்வா சிற்றில்
சிதையேலே.

5

## சிறுபறைப் பருவம்

குறுகுறு நடந்தெய்தி
எம்பிரான் திருமேனி
குழையமேல் ஏறிவேணிக்

கொந்நிணக் கோட்டினிற்
கோத்நலத் துதறிவான்
குளிர்புனல் புழைக்கையேற்றிப்

பொறியரவு நலைமாலை
வெள்ளென்பு கைம்மாப்
புலிச்சரும முதலணியெலாம்

பொள்ளென எடுத்தெடுந்
தங்கையன விற்பெய்து
போக்கியிள மதியைவன்றி

யெறுழுலவை யொன்றப்
பொருத்தித் திருக்கைமா
னிடைவைத்து முற்றுமதிசெய்

திருவிசும் புய்ந்துவான்
தருந்தரும் பேரணிகொ
டெங்கணு மலங்கரித்துச்

சிறுமையிலை இனியென
வசைக்குங் கரங்கொண்டு
சிறுபறை முழக்கியருளே

தென்கோ விருந்நநக
ருற்பல விநாயகன்
சிறுபறை முழக்கியருளே. க

சிறுதேர்ப் பருவம்

வண்டின முழக்கமுகை
விண்டலர் பசுந்துழாய்
மாலையம் படலைமார்பின்

மாயோன் கிடக்கையை
உடுக்கையென் றுண்டமட
மங்கைக்கு மகுடமான

தொண்டைமண் டலம்வாழ
மகுடம் பதித்தபொற்
சுடர்மணி நிகர்த்ததொல்சீர்த்

தொட்டிக் கலைப்பதி
தழைக்கஅப் பதிமருவு
தூயசிவ பத்தர்வாழக்

கண்டிகையும் வெண்ணீறு
மஞ்செழுத் தும்பொலிவு
காட்டவை திகமார்க்கமுங்

கரிசற்ற சைவமும்
வளர்ந்தோங்க வாங்குங்
கடற்புவி மகிழ்ச்சிதாங்கத்

திண்டிமந் தாக்குங்
குறட்கணஞ் சூழநீ
சிறுதேர் உருட்டியருளே

சிற்பரன் றென்கலைசை
யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டியருளே. ௧0



## ௧௬. தனித்திருமாலை

[அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்]

திருச்சிற்றம்பலம்

திங்களங் கொழுந்து வேய்ந்த
செஞ்சடைக் கொழுந்தே போற்றி
மங்கைவல் லபைக்கு வாய்த்த
மகிணநின் மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண்
அருட்சிவ களிறே போற்றி
கங்கையாய் மகிழுஞ் செல்வக்
கணேசநின் கழல்கள் போற்றி. ௧

கலிவண்ணத் துறை

உலகம் பரவும் பொருளென்
கோவென் றுறவென்கோ
கலகம் பெறுமைம் புலன்வென்
றுயருங் கதியென்கோ

நிலகும் பெறுநெய் யெனநின்
  றிலகுஞ் சிவமென்கோ
இலகைங் கரவம் பரநின்
  றனையென் னென்கேனே. ௨

அடியா ருள்ளந் தித்தித்
  தூறு மமுதென்கோ
கடியார் கொன்றைச் செஞ்சடை
  யானைக் கன்றென்கோ
பொடியார் மேனிப் புண்ணியர்
  புகழும் பொருளென்கோ
அடிகேள் சிந்தி விநாயக
  வென்னென் றறைகேனே. ௩

கமலமல ரயனயநன்,
  முதலமர ரிதயமுறு
  கரிசகல வருள்செய்பசு பதியாம்
நிமலநிறை மதியிலெளிர்
  நிரதிசய பரமசுக
  நிலையையருள் புரியுமதி பதியாம்

விமலபிரணவவடிவ
விகடதட கடகரட
விபுலகய முகசுகுண பதியாம்
அமலபர சிவவொளியி
னுதயசய விசயசய
வபயவெனு மெமதுகண பதியே. ௪

கட்டளைக் கலித்துறை

அம்பொன்று செஞ்சடை
யப்பரைப் போற்றன்
னடியர்தந்துக்

கம்பொன்றும் வன்னைங்
கருணைசெய் தானுங்
கருதுமிறே

வம்பொன்று பூங்குழல்
வல்லைபயோடு
வயங்கியவென்

கொம்பொன்று கொண்டெமை
யாட்கொண் டருளிய
குஞ்சரமே. ௫

### கலி விருத்தம்

அற்புதக் கணபதி
யமல போற்றியே
தற்பர சண்முக
சாமி போற்றியே
சிற்பர சிவமகா
தேவ போற்றியே
பொற்பமர் கௌரிநிற்
போற்றி போற்றியே. ௬

அருளுறுங் கயமுகத்
தண்ணல் பாதமும்
பொருளுறு சண்முகப்
புனிதன் றாள்களும்
தெருளுறு சிவபிரான்
செம்பொற் கஞ்சமும்
மருளற நாடொறும்
வணங்கி வாழ்த்துவாம். ௭

வண்ணக் கலிவிருத்தம்

துதிபெறு கணபதி
யிணையடி மலரும்
பதிதரு சரவண
பவன்மல ரடியுங்
கதிதரு பரசிவ
னியலணி கழலும்
மதியுற மனனிடை
மருவுது மிகவே. ௮

வண்ண எண்சீர் விருத்தம்

கலைநிறை கணபதி
சரணஞ் சரணம்
கஜமுக கணபதி
சரணஞ் சரணம்
தலைவநி னிணையடி
சரணஞ் சரணம்

சரவண பவகுக
சரணஞ் சரணம்
சிலைமலை யுடையவ
சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ
சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை
சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை
சரணஞ் சரணம்.

பெரும்பொருட் கிடமும்
பிரணவ வடிவிற்
பிறங்கிய வொருதனிப் பேறே
அரும்பொரு ளாகி
மறைமுடிக் கண்ணே
அமர்ந்தபே ரானந்த நிறைவே

தரும்பர போக
    சித்தியுஞ் சுத்த
  தருமமு முத்தியுஞ் சார்ந்து
விரும்பினோர்க் களிக்கும்
    வள்ளலே சித்தி
  விநாயக விக்கினேச் சரனே. ௧

நாவி னாலுனை
    நாடோறும் பாடுவார்
  நாடு வார்தமை
    நண்ணிப் புகழவும்
ஓவி லாதுனைப்
    பாடவுந் துன்பெலாம்
  ஓட வும்மகி
    ழோங்கவுஞ் செய்குவாய்
காவி நேர்களத்
    தான்மகி ழைங்கரக்
  கடவு ளேநற்
    கருந்தழி யென்னுமூர்

மேவி யன்பர்க்
கருள்கனா நாதனே
விளங்குஞ் சித்தி
விநாயக வள்ளலே. உ

திருச்சிற்றம்பலம்

## வல்லபைக் கணேசர்

[எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்]

முன்னருந் தவத்தோன்
முற்கலன் முதலா
முனிவர்க ளினிதுவி டைய
இன்னருள் புரியு
நின்னருட் பெருமை
இரவினும் பகலினு மறவேன்
என்னரும் பொருளே
யென்னுயிர்க் குயிரே

என்னரசேயென துறவே
மன்னரு நெறியின்
மன்னிய வறிவே
வல்லபைக் கணேசமா மணியே.

—இராமலிங்க சுவாமிகள்

## ௧௭. கணபதிமாலை

ஔவையார் களிகூர
அருள்புரிந்த நீதான்
செவ்வையார் உனதுமலர்த்
திருவடிதந் தருள்வாய்
தவ்வையோ(டு) அடற்கலியன்
தனையெரிக்கும் விழியாய்
கொவ்வைவாய்க் குறமடந்தை
கொழுநன்உயிர்த் துணையே. ௧

கஞ்ச மாமலர்க் கடவுளும்
முதன்மையிற் கருதும்

செஞ்ச ரோருகந் தாள்களைப்
புனைந்தருள் செய்வாய்
பஞ்ச பாணனை விழியினால்
எரித்துள பரமன்
கொஞ்ச லாற்களிப் புறுமொரு
குஞ்சரக் குவடே. உ

குறுமுனிக்கும் இந்திரற்கும்
குகவேட்கும் ஔவைஎனும்
கோடிக்கும் மேனாள்

உறுதிமிகுந் தவமளித்துத்
திருவருட்சீர் உணர்த்தியநீ
ஒளிப்ப தேனோ

மறுவிலதாம் பாற்கடலிற்
றுயில்கூர்வோன் மகவுரைக்கும்
மறைகள் ஏத்தும்

அறுசமயத் தொருமுதலாம்
பிரணவமே வடிவாகும்
ஆனைக் கன்றே. ங

—தண்டபாணி சுவாமிகள்

## ௧௮. ஆனைமுகன் அந்தாதி

அருளே வடிவாய் விளங்குகின்ற
  ஆனை முகனே நின் சரணப்
பொருளை உதவிப் புலையேனைப்
  புரந்தல் நினக்கே கடனாகும்
மருளு மனத்தால் மயங்குகின்றேன்
  மயங்கா திருக்கும் வகைபுகல்வாய்
தெருளும் அடியார் உளத்திருக்கும்
  தெவிட்டா அமுதே செந்தேனே.

தேனே பாலே செங்கரும்பின்
  தெளிவே பழமே தீனியே
கோனே யானை முகமுமொரு
  கொம்பும் இரண்டு பதமலரும்
தானே தோன்றி எனக்குனருள்
  தந்தால் நின்றன் பெருங்கருணைக்
கீனை முண்டோ சொல்லிடுவாய்
  எளியேன் உய்ய அறியேனே. ௪

செங்கமல சுவாமிகள்

## ௧௧. வாழ்த்துச் செய்யுட்கள்

திருச்சிற்றம்பலம்

கரியின் மாமுக முடைய
　கணபதி தாதைபல் பூதம்
திரிய இல்பலிக் கேகுஞ்
　செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்
சரியின் முன்கைநன் மாதர்
　சதிபட மாநட மாடி
உரிய நாமங்க ளேத்தும்
　ஒலிபுனற் காழிநன் னகரே. ௧

—சம்பந்தர்

பலபல காமத்த ராகிப்
　பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங்
　கணபதி யென்னுங் களிறும்

வலமேந் திரண்டு சுடரும்
  வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும்
  உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
  அஞ்ச வருவது மில்லை. ௨

முன்னை யார்மயி
  லூர்தி முருகவேள்
தன்னை யாரெனில்
  தானோர் தலைமகன்
என்னை யாளு
  மிறையவ னெம்பிரான்
பின்னை யாரவர்
  பேரயி லாளரே. ௩

கோவாய இந்திரனுள்
ளிட்டா ராகக்
குமரனும் விக்கின
விநாயகன்னும்
பூவாய பீடத்து
மேலயன்னும்
பூமியளந்தானும்
போற்றிசைப்பப்
பாவாய இன்னிசைகள்
பாடியாடிப்
பாரிடமுந் தாமும்
பரந்து பற்றிப்
பூவார்ந்த கொன்றை
பொறிவண் டார்க்கப்
புறம்பயம்நம் மூரென்று
போயினாரே. 1

௬

கைவேழ முகத்தவனைப்
படைத்தார் போலும்!
கயாசுரனை யவனாற்கொல்
வித்தார் போலும்!
செய்வேள்வித் தக்கனைமுன்
சிதைத்தார் போலும்!
திசைமுகன்றன் சிரமொன்று
சிதைத்தார் போலும்!
மெய்வேள்வி மூர்த்திதலை
யறுத்தார் போலும்!
வியன்விழி மிழலையிடங்
கொண்டார் போலும்!
ஐவேள்வி யாறங்க
மானார் போலும்
அடியேனை யாளுடைய
அடிகள் தாமே. ௪

முந்தைகாண் மூவரினும்
முதலா னான்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண்
முருக வேட்குந்
தந்தைகாண் தண்கடமா
முகத்தி னாற்குந்
தாதைகாண் தாழ்ந்தடியே
வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத
சித்தந் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால்
விடையோன் றேறும்
எந்தைகாண் எழிலாரும்
பொழிலார் கச்சி
ஏகம்பன்காண் அவனென்
எண்ணத் தானே. (1)

பொருந்தாத செய்கை
    பொலியக் கண்டேன்
  போற்றிசைத்து விண்ணோர்
    புகழக் கண்டேன்
பரிந்தார்க் கருளும்
    பரிசுங் கண்டேன்
  பாராகிப் புனலாகி
    நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த
    தொகுதி கண்டேன்
  மெல்லியலும் விநாயகனுந்
    தோன்றக் கண்டேன்
மருந்தாய்ப் பிணிதீர்க்கு
    மாறு கண்டேன்
  வாய்மூ ரடிகளைநான்
    கண்ட வாறே. க

—அப்பர்

திங்கள் தங்கு சடைகள் மேலோர்
திரைகள் வந்து புரள வீசுங்
கங்கை யாளேல் வாய்தி றவ்வாள்
கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலன் குமரன் பிள்ளை
தேவி யார்கோற் றட்டி யாளால்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓணை காந்தன் றளியு ளீரே. எ

—சுந்தரர்

தனதனற் றோழா சங்கரா சூல
பாணியே தாணுவே சிவனே
கனகநற் றாணே கற்பகக் கொழுந்தே
கண்கள்மூன் றுடையதோர்
கரும்பே
அனகனே குமரவி நாயக சனக
அம்பலத் தமரர்சே கரனே

நுனைகழ லிணையென் னெஞ்சினு
[ளினிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே.

—திருமாளிகைத் தேவர்

### புகழ்ப் பாக்கள்

ஐந்து கரத்தனை
ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை
போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை
ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி
போற்றுகின் றேனே. க

—திருமூலர்

எடுக்கு மாக்கதை
இன்தமிழ்ச் செய்யுளாய்

நடக்கு மேன்மை
நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத்
தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக்
கருத்துள் இருத்துவாம். ௧௦

—சேக்கிழார்

திருச்சிற்றம்பலம்

ஒருகோட்டன் இருசெவியன்
மும்மதத்தன் நால்வாயைங்
கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித்
தாழ்சடையான் தருமொருவா
ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி
ஓவாதே இரவுபகல்
உணர்வோர் சிந்தைத்

திருகோட்டும் அயன்திருமால்
செல்வமும்ஒன் றோவென்னச்
செய்யும் தேவே. ௧௧

—சிவஞானசித்தியார்

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே. ௧௨

—சிவஞானபோதம்

பழகிய பதித்துவம்
பான்மை யெய்தவும்
முழுகிய பசுத்துவ
முற்று நீங்கவும்

ஒழுகிய மும்மதத்
தொளிகொள் ஞானமார்
அழகிய பிள்ளையா
ரடிகள் போற்றுவாம். ௧௩

—சிவபுண்ணியத் தெளிவு

## சகுன வாழ்த்துச் செய்யுட்கள்

கைத்தல நிறைகனி
அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன்
அடிபேணிக்

கற்றிடும் அடியவர்
புத்தியில் உறைபவ
கற்பக மெனவினை
கடிதேகும்

மத்தமும் மதியமும்
வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய
மதயானை

மத்தள வயிறனை
உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு
பணிவேனே

முத்தமிழ் அடைவினை
  முற்படு கிரிதனில்
  முற்பட எழுதிய
      முதல்வோனே

முப்புர மெரிசெய்த
  அச்சிவ னுறைரதம்
  அச்சது பொடிசெய்த
      அதிதீரா

அத்துய ரதுகொடு
  சுப்பிர மணிபடும்
  அப்புன மதனிடை
      இபமாகி

அக்குற மகளுடன்
  அச்சிறு முருகனை
  அக்கண மணமருள்
      பெருமாளே! ௧௪

உம்பர்தருத் தேனுமணிக்
கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத்
துணர்வூறி
இன்பரசந் தேபருகப்
பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற்
றருள்வாயே
தம்பிதனக் காகவனத்
தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக்
கனியோனே
அன்பர்தமக் கானநிலைப்
பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப்
பெருமானே. ௧௫

—திருப்புகழ்

பாசத் தளையறுத்துப்
பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு
நிற்குமே—மாசற்ற
காரார் வரையீன்ற
கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தென் உளத்து. ௧௧

—காசிக் கலம்பகம்

எப்போ தகத்தும்
நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல். ௧௭

—நால்வர் நான்மணிமாலை

அத்தி முகத்—துத்தமனை
நித்தம் நினை—சித்தமே. ௧௮

—சிவஞான. பிள்ளைத்தமிழ்

## சுருதி வாழ்த்துச் செய்யுட்கள்

ஞான மாமத-யானைமேவுறின்
மான மாயையஞ்-சேனையோடுமே
—சதமணிமாலை

சுரகுலாதிபன்
தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற்
பெய்த வயிற்றினேன்
கூரக நீரைக்
கவிழ்த்த மதகரி
சரணம் நாளுந்
தலைக்கணி ஆக்குவாம். ௨௦
—பிரபுலிங்கலீலை

நடையூறு சொன்மடந்தை
நல்குவது நம்மேல்
இடையூறு நீங்குவது
மெல்லாம்—புடையூறு

சேனைமுகத் தாளிரியச்
சீறுமுகத் தானமதத்
தானைமுகத் தானை நினைந்தால்

—புறப்பொருள் வெண்பாமாலை

வாக்குண்டாம் நல்ல
மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி
நுடங்காது-பூக்கொண்டு
துப்பார் திருமேனித்
தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. ௨௨

—மூதுரை

பாலுந் தெளிதேனும்
பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு
நான்தருவேன்-கோலஞ்செய்

துங்கக் கரிமுகத்துத்
தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா. ௨௬

—நல்வழி

அல்லல் போம் வல்வினைபோம்
அன்னை வயிற் றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத்
துயரம்போம்-நல்ல
குணமதிக மாம் அருணைக்
கோபுரத்துள் மேவும்
கணபதியைக் கைதொழுதக் கால்.

—விவேகசிந்தாமணி

உள்ளமெனுங் கூடத்தில்
ஊக்கமெனுந் தறிநிறுவி
யுறுதி யாகத்

தள்ளரிய அன்பென்னுந்
தொடர்பூட்டி இடைப்படுத்தித்
தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக்
கவளமிடக் களிந்துண்டு
கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி
வேழத்தை நினைந்துவரு
வினைகள் தீர்ப்பாம். ௨௫

சத்தி யாய்ச்சிவ
மாகித் தனிப்பர
முத்தி யான
முதலைத் துதிசெயச்

சுத்தி யாகிய
சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன்
செய்யபொற் பாதமே. உசு

—திருவிளையாடற் புராணம்

மண்ணுலகத்தினிற்
பிறவி மாசற

எண்ணிய பொருளெலாம்
எளிதின் முற்றுறக்

கண்ணுதல் உடையதோர்
களிற்று மாமுகப்

பன்னவன் மலரடி
பணிந்து போற்றுவாம்.

திகட சக்கரச்
செம்முகம் ஐந்துளான்

சகட சக்கரத்
   தாமரை நாயகன்
அகட சக்கர
   வின்மணி யாவுறை
விகட சக்கரன்
   மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியின் மகுடம் மின்ன
   ஒளிர்தர நுதலின் ஓடை
வச்சிர மருப்பின் ஒற்றை
   மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க
   வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ரக்
   கணபதிக் கன்பு செய்வாம்   உக

—கந்த புராணம்

பண்ணியமும் வெண்கோடும்
பாசாங் குசப்படையும்
நண்ணியசெங் கைத்தலத்து
நாதா ஒரு கோட்டுத்
தண்ணிய வெண்பிறைத்
தாழ்சடையாய் மெய்யடியார்
எண்ணிய எண்ணியாங்
கீந்தருளும் வள்ளலே. ௧௦

விகட சக்கரம் வாரணம்
தொடர்வரும் வித்தக முகில்வீற
விகட சக்கர விந்தமன்
னவன்தனக் கருளுமெய்த்
தலைவாத
விகட சக்கர அகமென்
முலையுமை கான்முளை என்றுச்சே
விகட சக்கரர் எந்திரம்
எனச்சுழல் வெம்பவக் கடல்
[நெஞ்சே. ௧௧

—காஞ்சிப் புராணம்

அகரமென அறிவாகி
யுலக மெங்கும்
அமர்ந்தகர வுகரமக
ரங்கள் தம்மாற்
பகருமொரு முதலாகி
வேறு மாகிப்
பலவேறு திருமேனி
தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினையும்
இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை
புரிந்தல் லார்க்கு
நிகரில்மறக் கருணைபுரிந்
தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை
நினைந்து வாழ்வாம். ௧௨

—விநாயக புராணம்

பண்ணியம் ஏந்தும்
கரந்தனக் காக்கிப்
பால்நிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி
அரதனக் கலச
வியன்கரந் தந்தைதாய்க்
காக்கிக்
கண்ணில்ஆ ணவவெங்
கரிபிணிந் தடக்கிக்
கரிசினேற் கிருகையும் ஆக்கும்
அண்ணலைந் தனிகை
வரைவளர் ஆபத்
சகாயனை அகந்தழீஇக் களிப்பாம்.
—தணிகைப் புராணம்

திருவுங் கல்வியுஞ்
சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவும்
தீமையைக் காய்க்கவும்

பருவ மாய்நம
  துள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழந்துப்
  பிள்ளையைப் பேணுவாம். ௩௪
—விருத்தாசல புராணம்

அருளெனும் கடல்முகந்
  தடியர் சிந்தையாம்
பொருள்பெறு நிலஞ்சிவ
  போகமுற்றிட
வரமழை உதவுசெவ்
  வந்தி யானையின்
திருவடி இணைமலர்
  சென்னி சேர்த்துவாம். ௩௫
—செவ்வந்திப் புராணம்

புயல்காட்டும் பனிவரையின்
  பிடிதழுவும் சிவவேழம்
பொருப்பில் வானில்

இயல்காட்டும் இருபிடி சேர்
முந்நாலு துதிக்கையன்முன்
ஈன்ற ஞானச்
செயல்காட்டும் ஒருகோட்டின்
இருகோட்டு வெண்பிறைவாழ்
செக்கர் வானை
மயல்காட்டும் திருமேனி
மழைமதச்சண் பகக்களிற்றை
மனந்துள் வைப்பாம். ௩௬

—திருக்குற்றாலப் புராணம்

சீர்பூத்த இதழிபுனை
சிற்பரனார் அற்புதனார்
சிவையோர் பாகர்
நீர்பூத்த திருவுளத்தில்
நினைத்தபடி வேதமுனி
நிகழ்த்த லோடும்

ஏர்பூத்த ஒரு கோட்டால்
இலகுபா ரதமேரு
இடந்தே நிட்டும்

போர்பூத்த நெடுந்தடக்கைப்
பொல்லாத பிள்ளைபதம்
போற்றல் செய்வாம். ௧எ

—திருநெல்வேலிப் புராணம்

ஊற்றெ டுத்துவன்
டோலிடு மும்மதத்து
ஆற்றெ ழுக்கின்
அருவியஞ் சாரல்வாய்
ஏற்று கைக்கும்
இறைவற்கு முந்திய
மாற்றி லாக்களி
யானையை வாழ்த்துவாம்.

—திருச்செந்தூர்ப் புராணம்

வஞ்சத்தில் ஒன்றானைத்
துதிக்கைமிகத் திரண்டானை
வணங்கார் உள்ளே
அஞ்சரனை மூன்றானை
மறைசொலுநால் வாயானை
அந்தன் ஆகித்
துஞ்சவுணர்க் கஞ்சானைச்
சென்னியணி யாறானைத்
துகளே ழானைச்
செஞ்சொல்மறைக் கெட்டானைப்
பரங் கிரிவாழ் கற்பகத்தைச்
சிந்தை செய்வாம். ௫௬

—திருப்பரங்கிரிப் புராணம்

ஓங்குமொரு மருப்பானை
உயிர்க்குயிராய் இருப்பானை
உரக வேந்தன்

தாங்குநெடு நிலத்தானை
முகத்தானை வரைத்தானைச்
சயில மானைப்
பாங்குவைத்து மழுத்தானை
பரித்தான்தந் தளித்தானைப்
பசும்பொன் தோட்டுப்
பூங்கமல பதத்தானைப்
பொருவில்ஐந்து கரத்தானைப்
போற்றல் செய்வாம். ௪௦
—சிவராத்திரி புராணம்

வானுலகும் மண்ணுலகும்
வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ்
பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர
மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி
அஞ்சலிசெய் கிற்பாம். ௧௪
—சேக்கிழார்புராணம்

திருச்சிற்றம்பலம்

## ௨0. விநாயகர் வழிபாடு

[நிலைமண்டில ஆசிரியப்பா]

ஓம்எனும் பொருளாய்
உள்ளோய் போற்றி
பூமனும் பொருள்தொறும்
பொலிவாய் போற்றி
அகரம் முதலென
ஆனாய் போற்றி
அகர உகர
ஆதி போற்றி
மகரமாய் நின்ற
வானவ போற்றி ரு

பகர்முன் னவனும்
    பரனே போற்றி
மண்ணாய் விண்ணாய்
    மலர்ந்தாய் போற்றி
கண்ணுள் மணியாய்க்
    கலந்தாய் போற்றி
நீர்தீக் காற்றாய்
    நின்றாய் போற்றி
கார்குளி ராகக்
    குளிர்ந்தாய் போற்றி

பகலவன் நிலவாய்ப்
    பரந்தாய் போற்றி
நிகர்மின் கணமாய்
    நிலைத்தாய் போற்றி
மழைபொழி இமய
    வல்லிசேய் போற்றி

தழைசெவி எண்தோள்
தலைவ போற்றி
திங்கட் சடையோன்
செல்வ போற்றி ௧௫

எங்கட் கருளும்
இறைவா போற்றி
அறுமுகச் செவ்வேட்கு
அண்ணா போற்றி
சிறுகண் களிற்றுத்
திருமுக போற்றி
செம்பொன் மேனிச்
செம்மால் போற்றி
உம்பர் போற்றும்
உம்பல் போற்றி ௨௦

பண்ணியம் ஏந்துகைப்
பண்ணவ போற்றி

எண்ணிய எண்ணியாங்
கிசைப்பாய் போற்றி
அப்பமும் அவலும்
கப்புவாய் போற்றி
முப்புரி நூல்மார்பு
அப்பா போற்றி
எள்ளுருண் டைபொரி
ஏற்போய் போற்றி

தெள்ளுறு தெவிட்டாத்
தேனே போற்றி
மூவர் மொழியிடம்
மொழிந்தாய் போற்றி
தேவர்க் குரிய
தேவா போற்றி
மாலுக் கருளிய
மதகரி போற்றி
பாலெனக் கடல்நீர்
பருகினாய் போற்றி

பாரதம் எழுதிய
பரூஉக்கர போற்றி
மாரதம் அச்சொடி
மதவலி போற்றி
மாங்கனி அரன்பால்
வாங்கினோய் போற்றி
ஈங்கினி எம்பால்
எழுந்தருள் போற்றி
கரும்பா யிரங்கொள்
கள்வா போற்றி ௩௫
அரும்பொரு ளேயெம்
ஐயா! போற்றி
நினைபால் கடந்த
தேவே போற்றி
புனையாய் இடர்க்கடல்
போக்குவோய் போற்றி
பேழை வயிற்றுப்
பெம்மான் போற்றி

ஏழைக் கிரங்கும்
எம்மிறை போற்றி ௪௰

அடியவர் உள்ளம்
அமர்ந்தாய் போற்றி
அடிமலர் எம்தலை
அணிவாய் போற்றி
திருநீற் றொளிசேர்
செம்மால் போற்றி
இருவே றுருவ
ஈசா போற்றி
உளத் திருளை
ஒழிப்பாய் போற்றி ௪௫

கள்ளப் புலனைக்
கரைப்பாய் போற்றி
நம்பியாண் டார்க்கருள்
நல்லாய் போற்றி

எம்பிரா னுக்கு
இசைந்தாய் போற்றி
உருகுவோ ருள்ளத்
தொளியே போற்றி
பெருகருள் சுரக்கும்
பெருமான் போற்றி ௫௪

நம்பிக்கு வள்ளியைத்
தந்தாய் போற்றி
உம்பர்கட் கரசே
ஒருவ போற்றி
பிள்ளையார்ப் பெயர்கொண்
டுள்ளாய் போற்றி
வள்ளலாய் நலங்கள்
வழங்குவாய் போற்றி
மூவாச் சாவா
முத்தா போற்றி ௫௫

ஆவா எங்களுக்
கருள்வாய் போற்றி
தமிழ்ச்சுவை சார்திருச்
செவியாய் போற்றி
அமிழ்தாய் எம்மகத்
தானாய் போற்றி
மழவிளங் களிறே
மணியே போற்றி
குழவியாய்ச் சிவன்மடி
குலவுவோய் போற்றி ௧௦
பெருச்சா ளியூரும்
பிரானே போற்றி
நரிச்செய லார்பால்
நண்ணாய் போற்றி
செந்தா மரைத்தாள்
தேவா போற்றி
நந்தா மணியே
நாயக போற்றி

இருள்சேர் இருவினை
எறிவாய் போற்றி

கரிமுகத் தெந்தாய்
காப்பாய் போற்றி
ஆங்கா ரம்முளை
அறுப்பாய் போற்றி
பாங்கார் இன்பப்
பராபர போற்றி
கற்றவர் விழுங்கும்
கனியே போற்றி
மற்றவர் காணா
மலையே போற்றி

சொல்லொடு பொருளின்
தொடர்பே போற்றி
கல்லும் கரைக்க
வல்லோய் போற்றி

தொந்தி வயிற்றுத்
தந்தி போற்றி
முந்திய பொருட்கும்
முந்தியோய் போற்றி
ஐந்துகை யுடைய
ஐய போற்றி
ஐந்தொழில் ஆற்றும்
அமர போற்றி
அருளாய் அருள்வாய்
ஆண்டவ போற்றி
தருவாய் மணமலர்த்
தாராய் போற்றி
கயமுக அசுரனைக்
காய்ந்தாய் போற்றி
மயலறும் இன்ப
வாழ்வே போற்றி
ஆனையாய்ப் புழுவாய்
ஆனாய் போற்றி

பானை வயிற்றுப்
பரமே போற்றி
கடம்பொழி யானைக்
கன்றே போற்றி
மடம்ஒழி அறிவின்
வளனே போற்றி
பாலொடு தேனும்
பருகுவோய் போற்றி ௮௫

மேலொடு கீழாய்
மிளிர்வோய் போற்றி
எய்ப்பில் வைப்பாய்
இருந்தோய் போற்றி
மெய்ப்பொருள் வேழ
முகத்தாய் போற்றி
நல்லார்க் கெட்டும்
நாதா போற்றி
பொல்லா மணியே
புராதன போற்றி ௯௦

அறிவின் வரம்பை
அகன்றாய் போற்றி
குறிகுணங் கடந்த
குன்றே போற்றி
எட்டு வான்குணத்
தெந்தாய் போற்றி
கட்டறு களிற்று
முகத்தோய் போற்றி
மலரில் மணமாய்
வளர்ந்தாய் போற்றி ௧௫

அலர்கதிர் ஒளியின்
அமர்வோய் போற்றி
ஓங்கா ரம்முகத்
தொருத்தல் போற்றி
ஏங்கா துயிர்க்கருள்
இயற்கை போற்றி
எண்ணும் எழுத்துமாய்
இசைந்தாய் போற்றி

பண்ணும் பயனுமாய்ப்
பரந்தாய் போற்றி க௦௦

அருவே உருவே
அருவுரு போற்றி
பொருளே பொருளின்
புணர்ப்பே போற்றி
புகர்முகக் களிற்றுப்
புண்ணிய போற்றி
அகலிடம் நிறைய
அமர்ந்தோய் போற்றி
செல்வம் அருள்க
தேவா போற்றி க௦ரு

நல்லன எமக்கருள்
நாயக போற்றி
ஆக்கமும் ஊக்கமும்
அருள்வாய் போற்றி
காக்களங் களையுங்
கழலிணை போற்றியே

திருச்சிற்றம்பலம்

———

